# தமிழியல் கட்டுரைகள்

ந. சஞ்சீவி

# PAPERS IN TAMILOLOGY

N. SANJEEVI



சென்னைப் பல்கலைக் கழகம்

# PAPERS IN TAMILOLOGY

**Professor N. Sanjeevi**

Editor
**Dr. S. INNASI**
Professor & Head
Chair on Tamil Christian Literature
University of Madras
Madras-600 005

**UNIVERSITY OF MADRAS**

**1995**

# தமிழியல் கட்டுரைகள்

பேராசிரியர் ந. சஞ்சீவி

பதிப்பாசிரியர்
டாக்டர் சூ. இன்னாசி
பேராசிரியர் — தலைவர்
கிறித்தவத் தமிழ் இலக்கியத் துறை
சென்னைப் பல்கலைக்கழகம்



சென்னைப் பல்கலைக்கழகம்
1995

# முன்னுரை

பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் தமிழுணர்வும், தமிழ்ப்பணியும் தமிழகம் அறிந்ததே. சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பணியாற்றி ஓய்வு பெற்றதும் அவர்தம் ஆர்வலர் களும், நண்பர்களும், மாணவர்களும் அவருடைய மணிவிழா நினைவாகச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் ஓர் அறக் கட்டளையை நிறுவினர். பின்னர், அவருக்கு மணிவிழா எடுத்து மலர் வெளியிடத் திட்டமிடும்பொழுது எதிர்பாரா வகையில் இயற்கை எய்திவிட்டார். அந்நிலையில் அறக்கட்டளைக்கெனச் சேர்க்கப் பட்ட தொகையில் எஞ்சியதைச் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு வழங்கிப் பல்கலைக்கழக ஆய்விதழ்களில் பேராசிரியர் எழுதிய ஆய்வுக் கட்டுரைகளைத் தொகுத்து வெளியிடுமாறு பல்கலைக் கழகத்திற்கு வேண்டுகோள் விடுக்கப்பட்டது. அவ்வகையில் வெளி வருவதே இந்நூல்.

பேராசிரியரின் ஆய்வுக் கட்டுரைகள் தமிழ், ஆங்கிலம் என இருவகைப் பாகுபாட்டில் அமைகின்றது. இக்கட்டுரைகள் பேராசிரியரின் ஆய்வியற் புலங்களையும் போக்குகளையும் உணர்வையும் உள்ளத்தையும் தெளிவுறக் காட்டும் பான்மையன.

பல்கலைக்கழக வழி இதனை வெளியிடுவதற்கு இசைந்த பல்கலைக் கழகத்திற்கும், சிறப்பாக, துணைவேந்தர் பேராசிரியர் டாக்டர் ஆ. ஞானம் அவர்கட்கும் என்றும் நன்றியுடையோம்.

இந்நூல் வெளிவரத் துணைநின்ற பதிப்புத்துறை இயக்குநர் டாக்டர் வ. ஜெயதேவன் அவர்கட்கும், கட்டுரைகளைத் தந்துதவிய பேராசிரியரின் மருகர் டாக்டர் ம. பெ. பாலசுப்பிர மணியன் அவர்கட்கும், கட்டுரைகளைத் தேர்வு செய்ய உதவிய டாக்டர் வீ. அரசு அவர்கட்கும் நெஞ்சார்ந்த நன்றி. அழகுற அச்சிட்டுதவிய அவ்வை அச்சுக்கூடத்திற்கும் நன்றி.

சூ. இன்னாசி
அமைப்பாளர்
(பேராசிரியர் ந. சஞ்சீவி மணிவிழா
அறக்கட்டளைக் குழு)

சென்னை-5
8—3—90

## உள்ளுறை

### தமிழ்



### ஆங்கிலம்

1

# I. மலையாளிகள் தமிழ்

தமிழ் நாட்டுப் பழங்குடி மக்களுள் தனிச் சிறப்பு வாய்ந்தவர்கள் மலையாளிகள். இவர்களைப் பற்றிய விரிவான ஆராய்ச்சி உரைகளைத் தென்னார்க்காடு, வட வார்க்காடு, சேலம், திருச்சி மாவட்டக் கெசட்டீர்களும் தர்ஸ்டன் அவர்களின் 'சாதிகளும் குழுக்களும்' பற்றிய புகழ்பெற்ற நூலில் 'மலையாளிகள்' பற்றிய பகுதியும், டாக்டர் இர்ன்பில்ஸ் அவர்களின் 'கொல்லி மலையாளிகள்' பற்றிய ஆய்வுரையும் வழங்குகின்றன. ஈண்டு 'மலை யாளிகள்' பற்றிக் கலைக் களஞ்சியம் இரத்தினச் சுருக்க மாய்த் தரும் செய்திச் சுருக்கத்தை மட்டும் காண்போம். அது வருமாறு:[1]

மலையாளிகள் : சேலம் மாவட்டத்திலுள்ள சேர்வ ராயன், கொல்லி மலைகளிலும், திருச்சிராப்பள்ளி மாவட்டத் திலுள்ள பச்சைமலைத் தொடரிலும், தென்னார்க்காட்டி லுள்ள கல்வராயன் மலைகளிலும், வடவார்க்காட்டிலுள்ள சவ்வாது மலைகளிலும் வசிக்கும் ஆதிக் குடிகள். இவர்கள் தொகை சுமார் 60,000 ஆகும். இவர்களில் பெரிய மலை யாளிகள், கொல்லி மலையாளிகள், பச்சை மலையாளிகள் என்ற மூன்று பிரிவுகள் உண்டு. உடையிலும், சில பழக்க வழக்கங்களிலும் கேரள மக்களை ஒத்திருந்தாலும், இவர்கள் காஞ்சீபுரத்திலிருந்து வந்து குடியேறியதாகக் கூறுகிறார்கள்; தமிழ் பேசுகிறார்கள். பச்சை மலையாளிகள் பச்சை குத்திக்கொள்ளுகின்றனர். சாய ஆடைகளை அணி கின்றனர். விவசாயம் மலையாளிகளின் தொழில். தோட்டங்களிலும், காடுகளிலும் வேலை செய்கின்றனர்.

---

1. கலைக்களஞ்சியம்-தொகுதி 8 : பக்கம் 189.

தந்தை வழிமுறை உடையவர்கள். எனினும் பெண்களுக்கு மிகுந்த உரிமை உண்டு.

கிராமத் தலைவனுக்கு ஊர்க்கவுண்டன் என்பது பெயர். பரம்பரை உரிமை அவனுக்குண்டு. இந்துமதக் கடவுளர்களையும், பண்டிகைகளையும் மலையாளிகள் கொண்டாடுகிறார்கள். உயர்ந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்றும், வேளாளர்கள் என்றும் இவர்கள் கூறிக்கொள்ளுகின்றனர்.

பண்பாட்டின் கழி வழிகளாய் (Cultural backwaters) விளங்கும் மலையாளிகள் பேசும் தமிழ், செவிக்கும் சிந்தைக்கும் விருந்தாகும் சீர்மை படைத்தது. அவர்கள் வழங்கும் அத்தமிழில் ஒன்பான் சுவையையும் ஒருங்கே உணரலாம்; பழந்தமிழும் பழகு தமிழும் கொஞ்சிக் குலவுவதைப் பார்க்கலாம்; அனைத்திற்கும் மேலாக அவர்கள் வரலாற்றையும் வாழ்வையும் துலக்கவல்ல மானிடவியலுக்குப் பயன்படத்தக்க குறிப்புக்கள் பல இருத்தலை அறியலாம். சான்றாக அவர்தம் குலப் பெயர்களைப் பற்றி மட்டும் இங்குச் சிந்திப்போம்:

மலையாளிகட்கு இடையே உள்ள அறுபது குலங்களுள் நாற்பத்தெட்டுக் குலங்களின் பெயர்களை டாக்டர் இர்ன்பில்ஸ் அவர்கள் பொருள் விளக்கத்துடன் தமது நூலில் தந்துள்ளார். அவற்றின் அகர வரிசை வருமாறு:[2]

| | சொல் | பொருள் |
|---|---|---|
| 1. | அடுவன் | நெல்லும் வேறு ஒரு தானியமும் கலந்த கலவை |
| 2. | அம்பலவன் | தலைவன் |
| 3. | அலங்கன் | இரைச்சலிடுபவன் |
| 4. | இளனாண்டை | இளந்தலை அல்லது மென்றலை |
| 5. | இளையன் | சிறியவன் |
| 6. | எருமையன் | எருமை போன்றன்; பார்வைக்கு இனிமையற்றவன் |

2. Dr. Ehrenfels-Matriarchal Civilization among the Kolli Malaiyalis—pp. 53-4.

| | | |
|---|---|---|
| 7. | கண்ணாடியான் | கண்ணாடி உடையவன் |
| 8. | கபுக்கன் | தந்திரமுடையவன் |
| 9. | கவரை | கவரி மயிர் வீசுவோன்; அரச சின்னம் |
| 10. | கவி | புலவன் |
| 11. | கல் தொட்டி | கல்லாலான தொட்டியுடையவன் |
| 12. | கலசன் | சிறுபானையையுடையவன் |
| 13. | கள்ளன் | திருடன் |
| 14. | காடாட்டையன் | காடு அல்லது தோட்டம் உடையவன் |
| 15. | காரவடையான் | காரவடையை உண்பதில் விருப்பமுடையவன் |
| 16. | காவரசம் | காட்டு அரசன் |
| 17. | கானாடன் | காடுடையவன் |
| 18. | குட்டியாண்டி | சிறு தலைவன் |
| 19. | குடுக்கன் | குடுக்கை உடையவன் |
| 20. | குண்டுகழி | நொண்டி |
| 21. | குறவன் (கொறவன்) | குறவன் |
| 22. | கூத்தாடி | கூத்தாடி |
| 23. | கேளையன் | நெருப்புக் காப்போன் |
| 24. | கொழுக்கட்டை | கொழுக்கட்டை போன்றவன்; அழகில்லாதவன் |
| 25. | கோணன் | கோணலாய் இருப்பவன் |
| 26. | கோப்பையன் | பெருமை மிக்கவன் |
| 27. | சாட்டையன் | சாட்டையுடையவன் |
| 28. | சாம்பலாடி | சாம்பல் பூசியவன் |
| 29. | சில்லளை | சிறு ஆள் |
| 30. | சின்னுப்பன் | சிறியவன் |
| 31. | சூரியன் | சூரியன் |
| 32. | செம்பழன் | பாதிப் பழுத்த பழம் தின்றவன் |
| 33. | செறாவெட்டி | மரம் வெட்டி |
| 34. | சேக்கிளத்தி | பசுக்களைத் திருடுபவன் |
| 35. | சொல்லன் | சொல்லைக் காப்பாற்றுபவன்: சொல் வல்லான் |
| 36. | தேத்துப்புழை | தேன் வைக்கும் மூங்கில் குழாய்க் குப்பி |
| 37. | தேனன் | திருடன் |
| 38. | பருத்திக்குடையன் | பருத்திக் குடையுடையவன் |

39. பாசனன் — பயிர் செய்வோன்
40. புலியா[ர?]ண்டை — புலியையும் சிக்கவைக்கும் முட்புதர்
41. மண்ணிப்பன் — மந்தமானவன்
42. மறவன் — வீரன்
43. மாடவீட்டான் — மாட வீடுடையான்
44. மான குண்டன் — மானமுடைய பருமனானவன்
45. வலஞ்சியான் — வலஞ்சி ஊரினன்
46. வலியாண்டி — வலியவன்
47. வேடன் — வேட்டையாடுபவன்
48. வேலன் — வேலுடையவன்

மேற்கண்ட பட்டியலில் உள்ள சொற்களுள் சில வற்றின் சரியான தமிழ் வடிவும் பொருள் விளக்கமும் மேலும் ஆராய்தற்குரியன. ஆயினும். 'கானாடன்' இலக்கிய நலத்திற்கும் 'எருமையன்' இயல்பான கற்பனைக்கும் 'காரவடையான்' 'கொழுக்கட்டை' நகைச்சுவைக்கும் எடுத்துக் காட்டுக்கள். 'கூத்தாடி' 'சாம்பலாடி' மலையாளிகளின் கலையுணர்வுக்கும் சமயவுணர்வுக்கும் சான்றுகளாதல் கூடும். 'கோப்பையன்' மதுரை வட்டாரத்தில் திறமை மிக்கவனைக் குறிக்க 'அவன் பெரிய கோப்பன்' என வழங்கும் வழக்கை நினைவுபடுத்தும். 'மாடவீட்டான்', 'மான குண்டன்' என்பன முறையே பழங்குடி மக்களின் புறச் செல்வத்தையும் அகச் செல்வத்தையும் புலப்படுத்தும். 'வேடன்', 'மறவன்' 'பாசனன்' மலைவாழ் மக்களின் பல வகைத் தொழிலாற்றலைப் புலப்படுத்தும். 'சொல்லன்' மலையாளிகளின் மங்காப் புகழ்ச் செல்வமாய் மானிட இயலார் போற்றும் பெருஞ்செல்வமாய் விளங்கும் வாய்மை நலத்தை விளக்கும்.

## II. மலையாளிகள் தமிழ்-பொருட்சிறப்பு

'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே.'[1] மொழியியல் துறையில் சொல்லின் பொருட்சிறப்புப்பற்றிய ஆராய்ச்சி சுவை நிறைந்தது; பயன் செறிந்தது.[2] அவ்வகையில் மலையாளிகள் தமிழில் மணங்கொள் சொற்களில் ஒவ்வொன்றின் அடி முடி பற்றி ஆராய்வதே சுவையும் பயனும் தரும். முன்னைய கட்டுரையில் ஒரு சில சொற்களின் பொருட்சிறப்புப்பற்றிய குறிப்புகளைப் பார்த்தோம். இச்சிறு கட்டுரையில் மலையாளிகள் தமிழுள் பெரும் பொருட்சிறப்பு வாய்ந்த ஐந்து சொற்களைப்பற்றி மட்டும் அவற்றின் அகர வரிசையில் ஆராய்வோம்.

### எருத்து ஆட்டம்

எருத்து ஆட்டம்,[3] அல்லது மாட்டு விளையாட்டு[4] சிறப்பாக மாட்டுப் பொங்கலன்று தமிழ் மலையாளிகள் நடுவண் நடைபெறும் களியாட்டு. இதுபற்றிய விரிவான குறிப்புகளை அறிஞர் தர்ஸ்டன் தமது நூலுள் குறிப்பிட்டுள்ளார்.[5] ஆனால், அஃது எழுதப்பெற்று அரை நூற்றாண்டுக்கு மேலாகிவிட்டது. ஆயினும், அக்குறிப்புகள்

---

1. தொல்காப்பியம் - மூலம் (கழகப் பதிப்பு)-சூத்திரம் எண்: 640

2. பார்க்க: (அ) Dr. R. P. Sethu Pillai - Words and their significance, (1943 - 4)

   (ஆ) டாக்டர் மு. வாதராசனார் – மொழிநூல் (1963) — பக்கம் : 298-314

   (இ) கலைக்களஞ்சியம் - தொகுதி-5 - பக்கம் 256-7

3. இச்சொல் தமிழ்ப் பேரகராதியில் (Tamil Lexicon) இடம் பெறவில்லை.

4. ஷை ஷை ஷை

5. Edgar Thruston : Castes and Tribes of Souther India (1909)-Vol. IV. pp-417-9.

எழுதப்பெற்ற முப்பத்திரண்டு ஆண்டுகட்குப்பின் - 1941 இல் தாம் நேரில் பார்த்த எருத்தாட்ட நிகழ்ச்சியொன்றைத் தமக்குத் தோன்றிய மானிடவியல் ஆராய்ச்சிக் குறிப்பு களோடு டாக்டர் எரன்பில்ஸ் தமது நூலில் வரைந் துள்ளார்.[6] அப்பகுதியின் தமிழாக்கத்தை ஈண்டுத் தருதல் பயன் தருவதாகும். அப்பகுதி வருமாறு :

"மந்திர வளமைக் கருத்துத் தொடர்பாக எருத்தாட்டம் பற்றிய சில கருத்துக்கள் ஈண்டு எண்ணற்குரியன. மாரி யம்மன் கோவிலுக்கு எதிரே கிராம விழாக்கள் நடைபெறும் திடலுக்கருகே ஒரு சிறு அடைப்புக்குள் கிராமத்துக் காளை மாடுகள் கொண்டுவரப்பட்டன. பூசாரிகளும் கிராமத்து முதியோர்களும் சடங்கு சார்ந்த பல ஏற்பாடுகளைச் செய்த பின் அணி அணியாகக் காளைமாடுகளுள் ஒவ்வொன்றும் ஒன்றன்பின் ஒன்றாகத் தனித்தனியே அடைப்புக்குள் ளிருந்து பதினைந்து இருபது இளைஞர்கள் பின் தொடர வெட்ட வெளிக்குக் கொண்டுவரப்பெற்றது. அவ்விளை ஞர்கள் நட்ட நடுவில் காளை மாட்டின் மூக்கணாங்கயிற்றில் பிணைக்கப்பெற்ற நீண்டதொரு கயிற்றைப் பற்றிக் கொண்டு மாட்டின் இரு மருங்கிலும் ஒருபடித்தான இடை வெளியில் விட்டுவிட்டு நின்றார்கள். மேலும், மாட்டிற்கு முன்னும் பின்னும் இருவர் நின்று கொண்டு மாட்டை விரட்டினர். இவ்விருவருள் ஒருவர் நான் சேர்வராயன் மலையில் கண்ட கரிராமன் கோவில் பூசாரியார். அவர் தம்மைக் கம்பளம் ஒன்றால் மறைத்துக் கொண்டிருந்தார்; திருநீறு பூசிக் கொண்டிருந்தார். உண்மையில் ஒரு கோமாளி போலக் காட்சி அளித்த அவர், ஆட்டுத்தோல் துண்டு ஒன்று பொருத்தப்பட்ட நீண்ட மூங்கில் ஒன்றை வைத்திருந்தார். அவர் அதைக் கொண்டு மாட்டைப் புண் படுத்தாமல் கூச்சத் தொல்லை கொடுத்து விரட்டினார்; ஆட்டுத் தோலைக்கொண்டு மாட்டின் பாலுறுப்புகளில் கூச்சங்காட்டினார். இந்தச் சமயத்திலும், ஒருமுறை மாடு விழுந்து விட்ட போதும், அதைக் கயிற்றின் இருபுறமும் பற்றிநின்ற மக்கள் இழுத்தபோதும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள்—அவர்களுள் சிறப்பாக மங்கையர் — கொல்லென்று சிரித்தனர். அவ்வாறே வேறுவேறு எருத்து

---

6. Dr. O. R. Baron Ehrenfels : Traces of a Matriarchal Civilization among the Kollimalaiyalis (1943), pp. 70-1.

ஆட்டங்கட்கு இடையே பொழுது போக்காக மாறுவேடம் பூண்டிருந்த அந்த இளம்பூசாரியார் வேடிக்கைகள் செய்து கொண்டிருந்தபோது கூடியிருந்தோர் அரை அச்சத்தோடும் முழுமகிழ்ச்சியோடும் அவ்வேடிக்கைகளைச் சுவைத்த வண்ணம் இருந்தனர். ஏதாவது ஒரு காளை வெறி கொண்டு கிளம்பித் தன்னைப் பிணித்துக்கொண்டிருக்கும் கயிற்றைப் பற்றிக் கொண்டிருக்கும் இளைஞர்களை இழுத்துக்கொண்டு ஓடுமேல், அந்த இளைஞர்கள் மகிழ்ச்சி யால் கூக்குரல் இட்டார்கள். அந்த நேரத்தில் வெட்ட வெளியின் எதிர்ப்புறத்திற்கு வெற்றியோடு மாடு வந்து சேர்ந்ததைக் குறிக்கும் வகையில் ஒரு கிழவர் நெடுநேரம் உரத்துச் சங்கொலி செய்தார். அந்தக் குறிப்பிட்ட மாட்டின் ஆட்டம் இரண்டு அல்லது மூன்று முறைகள் கூடத் திரும்பத் திரும்ப ஆட்டுவிக்கப்பட்டது. மாட்டைப்பற்றிநிற்கும் கயிறு காட்டு வேட்டையில் கைப்பற்றிய மான்தோலால் ஆகியதாய் இருத்தல் வேண்டும். இந்த எருத்து ஆட்டத்தைக் காட்டு வேட்டையோடு தொடர்புபடுத்தும் இன்னொரு குறிப்பும் உண்டு. அது, மாட்டுப்பொங்கல் அன்று மேற்கொள்ளும் காட்டுவேட்டை வெற்றியுற்றாலே எருத்தாட்டம் வைக்க வேண்டும் என்று கொல்லி மலை யாளிகட்குள் இருந்த விதியே ஆகும்".

"கடைசி எருதின் ஆட்டம் முடிந்ததும் மாட்டைக் கயிற்றால் பற்றிக்கொண்டிருந்த அத்தனை பேரும் ஊர்க் கவுண்டன்-கிராம முதியோர் முன்னிலையில் நெடுஞ்சாண் கிடையாய் விழுந்தனர். அப்போது இளைஞர்கள் பற்றி இருந்த கயிறு அவர்கள் கழுத்தில் வைக்கப்பட்டது. அவ்வாறு குப்புற விழுந்து வணங்காதவர்களை மாறுவேடம் பூண்டு நீறு பூசிக் கொண்டு மருள் உற்ற நிலையில் இருந்த பூசாரியார் உதைத்துத் தள்ளினார். கீழே விழுந்து வணங் கியவர் முதியோர்களைக் கடந்த ஆண்டில் தாங்கள் செய்த எல்லாப் பிழைகளையும் பொறுத்தருளுமாறும் கிராமத்தில் மாட்டு வளம்பெருக வாழ்த்துமாறும் வேண்டினர். அது போழ்து சேர்வராயன் மலையில் கோயில்கொண்டிருக்கும் கரிராமன் சார்பில் பேசுவதுபோலப் பேசிய ஊர்க் கவுண் டன், இளைஞர்கள் கேட்ட இரு வரத்தையும் கொடுத்தான். இதற்குப்பின், நால்வர் சுமந்த இரு மூங்கில்களால் ஆகிய பல்லக்கில் பூசாரியர் ஊர்வலமாகச் செல்லல்-ஒரு முது மகள் இளமங்கையர் இருவர் வண்ணநீரால் நீராட்டப்

பூசாரியார் சடங்குகளோடு நீராடல்-ஆகிய நிகழ்ச்சிகளோடு நான் பார்த்த எருது ஆட்டம் முடிவுற்றது.''

**'கோவிந்தா - கோவிந்தா - கோவிந்தா'**

சமநிலத்து மக்களைப்போலவே மலையாளிகளுக்கும் கோவில்-குளம்-பூசாரி-பூசனை முதலியவற்றில் நிரம்ப நம்பிக்கையுண்டு. இறைவன் உறையும் கோயில்களில் தெய்வத்திருவுருக்களைத் தொட்டு வழிபாடு நிகழ்த்தும் உரிமையுடைய பூசாரிகளைத் தேர்ந்தெடுக்க அவர்கள் விந்தையான முறையொன்றைப் பின்பற்றுகின்றார்கள். அதன்படி பூசாரிக்குரிய தேர்தலில் கலந்துகொள்ள அனை வரும் அழைக்கப்படுகின்றனர். அவர்கள் முன்னிலையில் பொதுக் கிணறு ஒன்றில் ஒரு வகை மலர்க்கொத்தைத் தூக்குத் தொட்டியாகிய 'வாளி' ஒன்றில் வைத்துக் கிணற்றின் அடிக்குச் செல்லும்படி அனுப்புவர். பூசாரி யாகப் போட்டியிடுபவர் கிணற்றுக்குள் 'கோவிந்தா - கோவிந்தா - கோவிந்தா' என்று[7] பயபத்தியுடன் மூழ்கி அம்மலர்க்கொத்தைப் பத்திரமாக மேலே கொண்டு வருவர். இப்படி மலர்க் கொத்தை எடுத்து வருபவருக்குத் தான் கோயில் பூசாரி தொழில் கிடைக்கும். இப்படித் தேர்தெடுக்கப்பட்ட பூசாரியையே தங்கள் குலதெய்வங்கள் ஏற்கின்றன என்று இம்மலை மக்கள் கருதுகின்றார்கள்.[8]

**பாண்டியன் கல்**

மலையாளிகள் வாழ்புலத்தில் அவர்கள் வரலாற்றோடு தொடர்புடையதாகக் கிடைக்கும் தொல்பொருளியல் தொடர்புடைய பொருள்களுள் ஒன்று 'பாண்டியன் கல்'[9] ஆகும். இதைப்பற்றி டாக்டர் எர்ன்பில்ஸ் தமது நூலுள் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார்.[10] 'பாண்டியன் கல்' ஒரு வகை நினைவுப் பெருங்கற்பேழையே ஆகும். இக்கற்கள்

---

7. Tamil Lexicon-Vol. 11-p. 1199.

8. இது திரு. தேவராசன் அவர்களின் பச்சை மலையாளிகள் பற்றிய கையெழுத்துப்படி தந்த செய்தி.

9. இச்சொல் தமிழ்ப் பேரகராதியில் (Tamil Lexicon) இடம் பெறவில்லை.

10. Dr. O. R. Baron Ehrenfels: Traces of a Matriarchal Civilization among the Kollimalaiyalis (1943), pp. 73-4.

சேர்வராயன் மலையில் கிடக்கின்றன. இக்கற்பேழை களைப் பற்றிய கதைகளும் கருத்துகளும் பெரிய மலை யாளிகளிடையே நிரம்ப வழங்குகின்றன; கொல்லி மலையாளிகளிடம் இல்லை.

வரலாற்றுக்கு முற்பட்ட காலக் கல்லறைப் படிவங் களாகிய இந்த நினைவுப் பெருங்கற்பேழைகளை (Megalithic tombs) கல் வட்டங்கள் அல்லது செதுக்குறா இரு செங்குத்துக்கற்கள் மேலான தட்டைக்கல் அமைப்புகளால் இனங்கண்டுகொள்ளலாம். சேர்வராயன் மலையில் பல வாய்க் கிடைக்கும் இக்கற்பேழைகளுள் கரடு முரடான வடிவும் பெருங்கற்பாறை மூடியும் கொண்டதாகிய பேழை ஒன்றை டாக்டர் எர்ன்பில்ஸ் அவர்கள் திறந்தபோது அத னுள் சிவப்பு மட்பாண்ட ஓடுகளின் உடைவுகளும், இரும்புக் கருவிகளும், வண்ண மணற்படிவுகளும் இருக்கக் கண்டார். நினைவுப் பெருங்கற்பேழைகளுள் பெரும் பாலும் காணற்குரிய காட்சியே இதுவாகும்.

சேர்வராயன்மலையில் கிடக்கும் கற்பேழைகளைப் பெரிய மலையாளிகள் 'பாண்டியன் கல்' என்றே வழங்கு கின்றனர். அதனுடன் அக்கற்பேழைகளை அமைத்த பாண்டியர்கள் ஒருவகைக் குள்ளர்கள் என்றே அவர்கள் கருதுகின்றார்கள். பெரிய மலையாளிகளுள் சிலர் அக் குள்ளர்கள் ஒரு சாண் அல்லது இருசாண் உயரமே இருந் திருக்கக்கூடும் என்று கற்பனை செய்கின்றனர். மற்றுஞ் சிலர் இக்காலத்துப் பெரிய குழந்தைகள் அளவே அவர்கள் இருந்திருப்பார்கள் என்று எண்ணுகின்றனர். அந்தக் குள்ளர்கள் உழவர்களே என்றும், அவர்கள் மாட்டுக்குப் பதில் முயல்களையே உழவுக்குப் பயன்படுத்தினார்கள் என்றும், கயிறுகட்குப் பதில் புல்லையே பயன்படுத்தி னார்கள் என்றும் பெரிய மலையாளிகள் நம்புகின்றார்கள். ஆறடி நீலமும் நாலடி அகலமும் உள்ள இக்கற்பேழை மூடி களை அந்த ஒரு சாண் அல்லது இரு சாண் உயரக் குள்ளர் களே தூக்கினார்கள் என்றும் பெரிய மலையாளிகள் நம்பு கின்றார்கள். ஆனால், உண்மையில் டாக்டர் எர்ன்பில்ஸ் இக்கல்மூடி ஒன்றை நகர்த்த விரும்பியபோது அதற்கு வலிமை நிரம்பிய மூன்று பெரிய மலையாளிகளையே பயன் படுத்த வேண்டியிருந்தது. பெரிய மலையாளிகள் கருத்துப் படி அப்பாண்டியக் குள்ளர்கள் காசு நிரம்பப் படைத்திருந்

தாலும் கருமித்தனம் மிகவும் உடையவர்களாம். அதனால், ஒரு நாள் கடவுள் வானத்திலிருந்து பொன்னும் மணியும் மழையெனப் பொழியச் செய்தாராம். அப்போது குள்ளர்கள் அவையனைத்தையும் தாங்களே வாரிக் கொள்ளத் தலை தெறிக்க ஓடினார்களாம். அதைக்கண்ட கடவுள் பேராசைபிடித்த அக்குள்ளர்களை அழிக்கக் கருதி அனல் மழை பொழிந்தாராம். அதிலிருந்து தப்ப எண்ணிய குள்ளர்கள் பெருங்கற்பாதுகாப்புக் குடைவுகளுள் ஒரு சிறிது அடைக்கலம் புகுந்தார்களாம். ஆயினும், வெப்பந் தாங்காமல் முடிவில் வெந்து செத்தொழிந்தார்களாம். இதற்குப்பின் அவர்கள் விட்டுச்சென்ற கற்பேழைகளைத் தவிர வேறெதுவும் அவர்கள் தொடர்பாகக் கிடைக்க வில்லையாம். சேர்வராயன்மலைக்குப் பெரிய மலை யாளிகள் வந்தபோது குள்ளர்கள் பூண்டே இல்லையாம்.

'பாண்டியன் கல்' பற்றிப் பெரிய மலையாளிகள் சொல்லும் வாய்மொழிக் கதை இதுவாக, அப்பெயர் வரலாற்றுக் காலத்துத் தமிழக வேந்தர்களாகிய பாண்டியர் களின் தொடர்பைச் சுட்டிக் காட்டுவது வெள்ளிடை மலை. ஆயினும், 'பாண்டியன் கல்' பாண்டவர் கல்லாயிருக்குமோ என்று ஐயுறுவோரும் உண்டு. பழங்குடி மக்களிடத்தில் - அதிலும் பல கணவர் மணமுறை உடைய குழுக்களுள் - பாண்டவர் - திரௌபதி கதை பெற்றிருக்கும் செல்வாக்குப் பெரிதன்றோ?

### மேனரிக்கம்

மானிடவியல் ஆராய்ச்சியில் குடும்ப அமைப்பு உறவு முறைப் பாங்கு பற்றிய பகுதி பெருஞ்சிறப்பு வாய்ந்தது ஆகும்.[11] அவ்வகையில் மலையாளிகள் குடும்ப அமைப்பில் சிறப்பிடம் பெறும் ஒன்றே 'மேனரிக்கம்' என்பது. மாமன் மகளை உரிமை பாராட்டி மணக்கும் முறையே மேனரிக்கம்[12] ஆகும். இது பற்றியும் டாக்டர் எர்ன்பில்ஸ் தமது நூலுள் சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார். இம்முறை தாய்வழி உரிமை நாகரிகத்தின் எச்சமோ என்பது அவ்

---

11. பார்க்க : W. H. R. Rivers—Social Organization.
12. Tamil Lexicon-Vol. VI-p. 3365

வறிஞரின் ஐயம். இம்மேனிரிக்கம் பற்றிய விளக்கத்திற்கு அண்மையில் திரு. முருகசுந்தரம் அவர்கள் எழுதிய 'தமிழகத்தில் குறிஞ்சி வளம்' என்னும் நூலில்[13] உள்ள ஒரு சிறு பகுதியை மேற்கோளாகக் காட்டல் சாலும். அது வருமாறு :

"மேனரீகம் என்பது தமிழ் நாட்டிலும் ஆந்திர நாட்டிலும் பரவலாகக் காணப்படும் ஒருவகை மணமுறை. ஓர் இளைஞனுக்கு அவனுடைய தாய் மாமன் மகளே ஏற்ற மணப் பெண்ணாகக் கருதப்படுகிறாள். தாய் மாமன் வீட்டில் பெண்ணில்லையென்றால், அத்தை மகள் மணத்தற்கு உரியவளாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறாள். சில சாதியாரிடையே உடன் பிறந்த தமக்கையின் மகளை மணக்கும் உரிமை போற்றப்படுகிறது. இம்முறைகளின்படி மணக்கும் பெண்ணை 'உரிமைப்பெண்'[14] என்பர். அதுவும் நிறைந்த செல்வத்தோடும் நில புலன்களோடும் வந்து கணவன் பொருளாதாரத்தை உயர்த்துபவளாக இருந்தால் அவளைப் 'பெருமைப் பெண்'[15] என்றும் கூறுவர். இம்முறைகளை மீறிப் பெண் கொடுக்கவோ, அல்லது பெண் எடுக்கவோ யார் மறுத்தாலும் அச்செயல் பெருங்குற்றமாகக் கருதப்படும். இக்குற்றத்திற்காகச் சாதியை விட்டுக்கூட விலக்கி விடுவதுண்டு.

"மலையாளிகள் இம்மேனரீக முறையை மிகவும் தீவிரமாகக் கடைப்பிடிக்கின்றனர். சில சமயங்களில் இம்முறை விபரீதமாகக் கூடத் தோன்றும். உரிமைப் பெண்ணானவள் குல வழக்கப்படி இவளுக்கென்று குறிப்பிட்ட மணமகனை விட மிகவும் வயதில் முதிர்ந்தவளாக இருப்பதும் உண்டு. நான்கைந்து வயதுடைய இளைஞர்களுக்குப் பருவமெய்திய மங்கையரைத் திருமணம் செய்து வைப்பார்கள். அப்போது மணமகனுடைய தந்தை, தானே பொறுப்பேற்றுக்கொண்டு வம்ச விருத்தி செய்வதுண்டு. தன் மகன் வயதுக்கு வந்ததும் அப்பொறுப்பை அவனிடம் விட்டுவிடுவது தந்தையின் கடமை. பொறுப்பேற்றுக்கொண்ட மகன், தன் தந்தையின் வழியைத் தான் கடைபிடிப்பான். ஓர் இளமணமகனுக்குத் தந்தை இல்லை என்றாலோ, அல்லது தந்தை இருந்தும்

13. Dr. O. R. Baron Ehrenfels: Traces of a Matriarchal civilization among the Kollimalaiyalis (1943)-pp. 56-7

14. *திரு. முருக சுந்தரம் : தமிழகத்தில் குறிஞ்சி வளம் (1962) — பக்கம் 78 - 9*

# III

கொல்லி மலையாளிகள் குலப்பெயர்கள் பற்றி டாக்டர் எர்ன்பீல்ஸ் அவர்கள் தமது நூலில் தந்துள்ள குறிப்புகள் பற்றிச் சிந்தித்தோம். இங்கு மலையாளிகள் தமிழ் பற்றி மேலும் சில குறிப்புகளை ஆராய்வோம். தமிழ் மலை யாளிகள் நாவில் தவழும் சொற்களுள் 425-இன் அகர வரிசை வருமாறு :

அஞ்சூர்
அட்டி நாடு
அண்ணன்
அபிஷேகம்
அம்பலன்
அம்மா
அர்ச்சகர்
அரங்க சிவன்
அரங்க கேசவன்
அரங்கத்தப்பன் சுவாமி
அரணை
அரிய கவுண்டன் நாடு
அரியநாச்சி
அரியூர் நாடுகள்
அருச்சுனன்
அருநாட்டு மலை
அலரி
அறப்பளி
அறப்பளீஸ்வரன்
அறுமுகம் பில்லு
ஆட்டம்
ஆடிப் பதினெட்டு
ஆண்டி
ஆத்தா
ஆத்தி நாடு
ஆத்தூர்
ஆதிசிவன்
ஆரங்காட்டப்பன்
ஆலத்தூர் நாடு
ஆலாடி பட்டி
ஆறு நாட்டு மலை
இரணிய ராவந்தன்
இராமன்
இருக்கிறா?
இலட்சுமணன்
(இ)லிங்கம்
இளைய நாச்சி
உரிமைப் பெண்
உருளியன்
ஊத்தங்கரை
ஊர்க்கவுண்டன்
ஊர் மூப்பன்
எடப்புலி நாடு
எமையண்டி குலம்

எருத்து ஆட்டம்
எல்லைக் கறுப்பன்
ஏழுகளா நாச்சி
ஏழுகாரை நாச்சி
ஐயனார்
ஓமலூர்
கங்காணி
கஞ்சி
கஞ்சேரிக் கிராமம்
கட்டிக்கிறது
கடவுள்
கண்டகம்
கண்ணன் குலம்
கண்ணத்தன் குலம்
கணியன்
கந்தசாமி
கம்பளி (கும்பிளி)
கம்பு
கரடியூர்
கரிநாள்
கரியன்
கரிராமன்
கருடன்
கரும்பிடாரி
கரை
கல்வராயன் மலை
கலசம்
கலியாணம்
கவுண்டச்சி
கவுண்டர்(ன்)
கள்ளன்
கள்ளா குலம்
கறி
கறுப்பன்
கன்னி அம்மா
காக்கம்பாடி
காஞ்சி மண்டலத்தார்
காஞ்சி மண்டலம்
காஞ்சீபுரம்
காமாட்சி
காரக்காட்டுப் பிடாரி
காரக்காரன்
காரமண்டை
காராளன்
காரிராமன்
காலவி
காளத்திக் கவுண்டன் நாடு
காளி மாலை
காளி(யம்மா)
கீக்கிடையன்
கீரிப்பட்டி
கீழ்க்கடைக்குலம்
கீழ் நாட்டன்
கீழ் நாடு
கீழூர்
குங்குமம்
குசுவம்
குசுவம் (கொசுவம்)
குட்டி(ட)க்கவுண்டன்
குட்டி மணியம்
குட்டையன்
குடுமி
குண்டுணி நாடு
குண்டூர்
குண்டூர் நாடு
குதிரை பாஞ்சி
குந்தினி நாடு
குரங்குப்பட்டி
குரு
குருக்கள்
குருப கவுண்டன் நாடு
குலம்
குழம்பு
குறிச்சிடையான்

சேலூர் நாடு
சேலூர் நாடு சக்கிரத்திப் பட்டக்காரன்
சொல்லுடையான்
சோகப்பிடாரி
சோளம்
தட்டி
தம்பி
தம்மட்டம்
தம்மம்பட்டி
தமுக்கு
தர்மர்
தர்ம ராஜா
தர்மராஜா கோவில்
தனிபாலை பொங்கலாயி
தாதன்
தாயாதி காரன் வகுப்பு
தாயே
தாலி
தானாதி
திக்கி
திங்களூர்
திண்ணனூர் நாடு
திருப்புலி நாடு
திருவிச்சி குலம்
திரௌபதி (அம்மா)
திரௌபதை
தினை
தீட்டுக் குடிசை
தீபாவளி
தீர்த்தம்
துக்கன்
தும்பல் கணவாய்
துரும்பு
துரை
துரை கவுண்டன்
தூபம்
தை
தெம்பா நாடு
தென்பறநாடு (தெம்பற நாடு)
தேர்
தேவனூர் நாடு
தேவேந்திரப் பள்ளன்
தொட்டியன்
தோப்பூர் ஆறு
தோம்ப கல்லனூர்
நகுலன்
நடுவண்ணன்
நந்தி
நம்பியாண்டான்
நமஸ்காரம்
நல்லமடி
நல்லையகவுண்டன் நாடு
நலங்கு
நாச்சி
நாச்சியம்மா
நாஞ்சியம்மா
நாட்டான்
நாட்டுக்கட்டு
நாட்டுக் கவுண்டன்
நாட்டுக்குழி எடுகாம்பா
நாடு
நாமக்கல்
நாமம்
நாய்ச்சி
நான்கு நாடு மலையாளிகள்
நாவிதையா
நீவித்தியா
நெல்
பக்கலம்
பங்குனி
பச்சை மலை
பச்சை மலையாளி
பச்சை மலை மூப்பன்

பட்டக்காரன்
பட்டம்
பட்டவன்
பட்டி
பட்டுகுன்னம் பட்டி
பந்தல்
பயிலம் நாடு (பயில் நாடு)
பறையர்
பன்றி
பனிக்கன்காடு பொங்கலாயி
பாட்டன்
பாண்டவர்
பாண்டியன் கல்(லு)
பாப்பான்
பார்கூர் மலை
பார்வதி
பார் வேட்டை
பாராடியம்மா
பாலமலை
பாலமேடு கிராமம்
பிடவன்
பிடாரி(யம்மா)
பிரசாதம்
பிரக்கரை நாடு
பிள்ளையார்
பீமன்
பீரக்கரை நாடு
பீலன் குலம்
பீலப்பாடி நாடு
புஞ்சை
புடவை
புண்ணாக்கு
புத்
புதுப்பிடாரி
புதூர்
புலி (பிலி)
புளி கலக்கு
புஷ்பவதி
பூக்கலம் சுவாமி
பூச்சம்மா
பூசன் குலம்
பூசாரி
பூதமலை
பூமி
பூஜாரி காளி கவுண்டன்
பூஜை
பெரிய
பெரியகல்ராயன்
பெரிய கவுண்டன்
பெரிய கறுப்பன்
பெரியண்ணன்
பெரிய துரை
பெரிய நாடன்
பெரிய பட்டக்காரன்
பெரிய பயல்
பெரிய பிடாரி
பெரிய பிலி
பெரிய மலையாளி
பெருமாள்
பெருமாள் கோவில்
பெருமை
பேக்காடு பொங்கலாயி
பேய்ச்சி
பேய்ப்பெருமாள்
பேளூர்
பொங்கல்
பொங்கலாயி
பொட்டு
பொல குடிசை
பொலி எருது
பொன்னாயி
போயிருக்கான்
பைத்தூர்
பைத்தூர் நாடு

பைத்தூர் மலை
மகாராசனாயிரு
மங்கலம்
மஞ்சவாடி மலை
மஞ்சரை
மண்ணுப்பிடாரி
மண்மலை நாடு
மந்திரம்
மந்திரி
மந்தை
மயிபாடி பொங்கலாயி
மலாக்காரன்
மலா நாயக்கன்
மலுங்கூட்டுப் பிடாரி
மாசி
மாசி மலையன்
மாட்டாயன்
மாட்டுப் பொங்கல்
மாணிக்கன் குலம்
மாமாஞ்சி
மாமை
மார்வசி
மாரியம்மன் (மாரி,
மாரியம்மா, மாரியாயி)
மானம்
மீன்
மீன் பூத்துவிட்டது
முகூர்த்தம்
முத்த நாடு
முன் குடுமி
முனி
மூகாண்டி குலம்
மூலக்காடு பொங்கலாயி
மூப்பன்
மூன்று நாடு
மூன்று நாடு மலையாளிகள்
மூனூர்
மூனூர் மலையாளிகள்
மேல்நாடு
மேலநாச்சி
மேனாரிகம்
மொறம்
மோகநாடு
மோர்ப்புளி
ரவிக்கை
ராகி
ராகிக்களி
ராமகுலம்
ராஜா
ராஜு
லட்சுமி
வகுப்பு
வசிஷ்ட நதி
வடமன்
வடமி
வண்டையான்
வணக்கம்
வருண பகவான்
வலங்கை
வளப்பூர்
வளப்பூர் நாடு
வளப்பூர் பட்டக்காரன்
வளவாண்டி நாடு
விக்கினேஸ்வரர்
விபூதி
விஷ்ணு
விஷ்ணு பெருமான்
வீட்டுக்காரி
வீட்டுக்குத் தூரம் போயிட்
டாங்க
வீட்டுச்சாமி
வீட்டுச்சாமி பூசை
வெள்ளம்
வெள்ளையன்

| | |
|---|---|
| வெளியே போயிட்டா | வேப்பாடி மலை |
| வென்னாடு | வேலராயன் பொங்கலாயி |
| வேட்டக்காரன் சுவாமி | வேலாண்டி சாமி |
| வேட்டக்காரன் | வேளாளன் (வெள்ளாளன்) |
| வேடச்சி | வைப்பு |
| வேடன் | வைகாசி (வையாசி) |
| வேடி | ஜெருகு மலை |
| வேணாடு | |

இப்பட்டியலை உருவாக்கத் துணை புரிந்த ஏழு சிறந்த நூல்கள் (1-4) சென்னை அரசின் வெளியீடுகளாகிய சேலம், வடவார்க்காடு, தென்னார்க்காடு, திருச்சி மாவட்டப் பல்பொருள் ஆய்வறிக்கைகளும்[2] (5) எர்கார் தர்ஸ்டனின் தென்னிந்திய சாதிகளும் குழுக்களும்''[3] (6) சென்னை மாநில, ஆட்சித்துறைப் பல்பொருள் ஆய்வு நூலும்[4] (7) டாக்டர் எரன்பில்சின் கொல்லி மலையாளிகளும்[5] ஆகும். அச் சேறிய இந்நூல்களோடு சென்னைப் பல்கலைக்கழக மானிடவியல் துறைப் பணியாளர் திரு. ந. தேவராசன் அவர்கள் 'மானிடவியல்' பற்றிச் சற்றேறக்குறைய 300 பக்கங்களில் எழுதியுள்ள நூலின் கையெழுத்துப்படியில் 'பச்சை மலைத் தமிழர்' பற்றி 34 பக்கங்களில் அமைந்துள்ள பகுதி பெரிதும் பயன்பட்டது. இவற்றுடன் பேராசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்கள் 'நன்னனது மலை நாடு' பற்றி எழுதியுள்ள அரிய ஆராய்ச்சிக் கட்டு ரையும்[6] நேரில் தெரிவித்த குறிப்புகளும், பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் வடவார்க்காட்டு மாவட்டத்துச் சவ்வாது மலையாளிகள் பற்றித் தமது நினைவிலிருந்து கூறிய குறிப்புகளும், யான் இரண்டாண்டு கட்கு முன்பு வாணியம்பாடி சென்றிருந்த போது அவ்வூர் இஸ்லாமியக் கல்லூரி மாணவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட குறிப்புகளும் மேற்கண்ட பட்டியல் படைக்கும் பணியில் உதவியாய் அமைந்தன.

மேற்கண்ட பட்டியலிலுள்ள சொற்கள் மலையாளிகள் தமிழில் உள்ள ஒருசிறு பகுதியே. இச்சொற்களுள்ளும் சில வற்றின் உண்மை உருவும் பொருளும் புலனாகவில்லை. ஆயினும் கிடைக்கும் விளக்கங்களைத் துணையாகக் கொண்டு இச்சொற்களின் வகை-வளம் பற்றி ஆராய்தல்

மேலும் இத்துறையில் உண்மைகள் ஒளிர ஒரு தூண்டு கோலாகவேனும் ஆதல் உறுதி.

ஒரு வகையில் மானிடவியல் தாய் பெற்ற மகளே விளக்க மொழியியல் (Descriptive Linguistics). மானிடவியல் ஆராய்ச்சியினின்றும் கிளைத்தெழுந்ததே அமெரிக்க விளக்க மொழியியல் ஆராய்ச்சி.[7] எனவே, உருவகித்துச் சொன்னால் தாயும் மகளும் தாளிதம் செய்தமைத்த சமையலைப் போன்றது மொழியியல் (Anthropoligical Lidguistics). பயன் செறிந்த இம்மானிடவியல் - மொழியியல் ஆராய்ச்சிக்கு மேலும் சிறந்ததொரு வருங்காலம் வாய்க்கப்போவது திண்ணம்.[8] இக்கட்டுரையில் மானிடவியல் - மொழியியல் கண்கொண்டு சில உண்மைகளைக் காண்போம்.

ஒரு கூட்ட (சமுதாய) மக்கள் வழங்கும் சொற்கள் அக் கூட்டத்தாரின் நாவின் இயக்கம் நெஞ்சின் இயக்கம் ஆகிய இருபேரியக்கங்களையும் எடுத்துரைக்கும் வல்லாண்மை பெற்று விளங்கும் நீர்மையன. இவ்வுண்மைக்கு மேற்கண்ட பட்டியலிலிருந்து சான்றுகள் சில காணும் முயற்சியில் அப்பட்டியலில் உள்ள சொற்களைப் பின் வரும் வகைகளில் அகர வரிசையில் பாகுபடுத்திக் காண்போம் :

I. ஆண் தெய்வப் பெயர்கள் (31)

அரங்க சிவன்
அரங்க சேவகன்
அரங்கத்தப்பன் சுவாமி
அறப்பளீஸ்வரன்
ஆண்டியப்பன்
ஆதி சிவன்
ஆரங்காரட்டப்பன்
இராமன்
இலட்சுமணன்
உருளியன்
கந்தசாமி
கறுப்பன்
கரி ராமன்
கோவிந்தா......
சடையன்
சுப்பிரமணியர்
சுவாமி
நம்பி ஆண்டான்
பிள்ளையார்
பூக்கலம் சுவாமி
பெரிய ஆண்டவன்
பெருமாள்
மாசி மலையன்
முனி
வருணபகவான்
விக்னேஸ்வரர்
விஷ்ணுபெருமாள்
வீட்டுச்சாமி
வேட்டக்காரன் சுவாமி
வேட்டுக்காரன்
வேலாண்டிச்சாமி

## II. பெண் தெய்வப் பெயர்கள் (36)

அம்மா
அரிய நாச்சி
இளைய நாச்சி
ஏழுகளா நாச்சி
கரும் பிடாரி
கன்னியம்மா
காமாட்சி
காரக்காட்டுப்பிடாரி
காளி(யம்மா)
கொங்களாயி
கோங்காலியம்மா
கோங்காலா(ளா)யி
கோடகார நாச்சி
கோசகுளி பொங்கலாயி
சின்னப் பிடாரி
சோகப் பிடாரி
தனிப்பாலை பொங்கலாயி
திரௌபதி (தை) (அம்மா)
நாச்சி
நாச்சியம்மா
நாஞ்சியம்மா
பணிக்கன்காடு பொங்கலாயி
பாராடியம்மா
பிடாரியம்மா
புதுப் பிடாரி
பூச்சம்மா
பெரிய பிடாரி
பொங்கலாயி
பேக்காடு பொங்கலாயி
மண்ணுப் பிடாரி
மயிலாடி பொங்கலாயி
மலுங்காட்டுப் பிடாரி
மாரியம்மன் (மாரியம்மா,
மாரியாயி)
மூலக்காடு பொங்கலாயி
மேலநாச்சி
வேலராயன் பொங்கலாயி

## III. இதிகாசப் புராணத் தெய்வப் பெயர்கள் (8)

இராமன்
இலட்சுமணன்
அருச்சுனன்
சகாதேவன்
தர்மர் (தர்மராஜா)
திரௌபதி (தை) (அம்மா)
நகுலன்
பீமன்

## IV. கிராமத் தெய்வப் பெயர்கள் (24)

அம்மா
அரங்கத்தப்பன் சுவாமி
அரியநாச்சி
ஆரங்காட்டப்பன்
எல்லைக்கறுப்பன்
ஏழுகளா நாச்சி
காளி(யம்மா)
கேடகார நாச்சி
கொங்களாயி
கோங்காலியம்மா
கோங்காலா(ளா)யி
நாஞ்சியம்மா
நாட்டுக்குழி எடுகாம்பா
பாராடியம்மா
பிடாரி(யம்மா)
பூச்சம்மா
பொங்கலாயி
மண்ணுப் பிடாரி
மாரியம்மன் (மாரியம்மா,
மாரியாயி)

முனி
மேலநாச்சி
வீட்டுச்சாமி
வேட்டக்காரன் சுவாமி
வேலாண்டிச் சுவாமி

## V. ஒரே தெய்வத்தின் வேறு பெயர்கள்

### (அ) சிவன் (5)

அரங்க சிவன்
அரங்கத்தப்பன் சுவாமி
அறப்பனீஸ்வரன்
ஆதி சிவன்
ஆரங்காட்டப்பன்

### (ஆ) திருமால் (3)

காரிராமன்
கோவிந்தா...
பெருமாள்

### (இ) முருகன் (3)

கந்தசாமி
வேட்டக்காரன் சுவாமி
வேலாண்டிச் சாமி

### (ஈ) காளி (2)

காளி
நாட்டுக்குழி எடுகாம்பா

### (உ) பிடாரி (7)

கரும் பிடாரி
காரக்காட்டுப் பிடாரி
சின்னப் பிடாரி
சோகப் பிடாரி
புதுப் பிடாரி
பெரிய பிடாரி
மலுங்கூட்டுப் பிடாரி

### (ஊ) நாச்சி (5)

அரிய நாச்சி
இளைய நாச்சி
ஏழுகாரை நாச்சி
கோடகார நாச்சி
மேலநாச்சி

### (எ) பொங்கலாயி (7)

கோசகுளி பொங்கலாயி
மயிலாடி பொங்கலாயி
தனிப்பாலை பொங்கலாயி
மூலக்காடு பொங்கலாயி
பனிக்கன் காடு பொங்கலாயி
பேக்காடு பொங்கலாயி
வேலராயன் பொங்கலாயி

## VI. சமயச் சார்புடைய சொற்கள் (19)

அபிஷேகம்
இலிங்கம்
கடவுள்
குரு
கோவில்
தீர்த்தம்
தூபம்
நந்தி
நாமம்
பாண்டியன் கல்(லு)
பிரசாதம்
புத் (நரகம்)
பெருமாள் கோவில்
பெரிய பிலி (ஒரு கோயில் சிற்பம்
பூசாரி
பூஜை
பொலி எருது(அறப்பளீஸ்வரருக்குச் சைவர் நேர்ந்து விடும் காளை)
மந்திரம்
விபூதி

VII. கதைக் குறிப்புடைய வழக்குகள் (2)

கோவிந்தா - கோவிந்தா - கோவிந்தா

ராஜூ

VIII. நாட்டுப் பெயர்கள் (34)

அட்டி நாடு
அரிய கவுண்டன் நாடு
அரியூர் நாடுகள்
ஆத்தி நாடு
ஆலத்தூர் நாடு
எடப்புலி நாடு
காளத்தி கவுண்டன் நாடு
கீழ் நாடு
குண்டுனி நாடு
குண்டூர் நாடு
குந்தினி நாடு
குருப கவுண்டன் நாடு
சித்தூர் நாடு
சேல நாடு
சேலூர் நாடு
திண்ணனூர் நாடு
திருப்புலி நாடு
தெம்பா நாடு
தென்பற நாடு
தேவனூர் நாடு
நல்லைய கவுண்டன் நாடு
நான்கு நாடு
பயிலம் நாடு
பீரக்கரை நாடு
பீலாப்பாடி நாடு
பைத்தூர் நாடு
மண்மலை நாடு
முத்த நாடு
மூன்று நாடு
மோக நாடு
வளப்பூர் நாடு
வளவாண்டி நாடு
வென்னாடு
வேணாடு

IX. ஊர்ப் பெயர்கள் (22)

அஞ்சூர்
ஆத்தூர்
ஆலாடிப்பட்டி
ஊத்தங்கரை
ஓமலூர்
கரடியூர்
காஞ்சீபுரம்
கீரப்பட்டி
கீழூர்
குண்டூர்
குரங்குப்பட்டி
கோவில் புதூர்
செங்குந்த பட்டி
சேலூர்
தம்மபட்டி
தரகுப்பட்டி
திங்களூர்
தோம்ப கல்லனூர்
நாமக்கல்
பட்டுக்குன்னம் பட்டி
மூனூர்
வளப்பூர்

X. மலைப் பெயர்கள் (18)

அறுநாட்டு மலை
ஆறு நாட்டு மலை
கல்வராயன் மலை
காளி மலை
கொல்லி மலை
சவ்வாது மலை
சின்ன மலை
செவ்வரி மலை
சேர்வராயன் மலை

பச்சை மலை
பார்கூர் மலை
பால மலை
பூத மலை
பெரிய மலை
பைத்தூர் மலை
மஞ்சவாடி மலை
வேப்பாடி மலை
ஜெருகு மலை

## XI. ஆடவர் பெயர்கள் (50)

அம்பலன்
கட்டையன்[9]
கரியன்
கவுண்டர்(ன்)
கள்ளன்
கறுப்பன்[10]
கீழ் நாட்டான்
குட்டையன்[11]
குறிச்சிடையான்
கூத்தாரி
கூலிக்காரன்
கூனைப்பித்தன்
கேரளன்
கொல்லி மலையாளி
கோங்கன்
சடைய கவுண்டன்
சடையன்
சாக்கிரத்தி
சின்னண்ணன்
சின்னப் பயல்
சின்ன மலையாளி
சின்னவன்[12]
சீரங்கன்
செம்பூரான்
செம்போதன்
சேமரையான்
சொல்லுடையான்
துக்கன்
துரை கவுண்டன்
நடுவண்ணன்
நாவிதையா
நீவிதையா
பச்சை மலையாளி
பச்சை மலை மூப்பன்
பச்சையன்[13]
பட்டவன்
பிடவன்
பூஜாரி காளி கவுண்டன்
பெரியன்[14]
பெரிய கவுண்டன்
பெரிய கறுப்பன்
பெரியண்ணன்
பெரிய நாடன்
பெரிய பயல்
பெரிய மலையாளி
பெரிய மூக்கன்[15]
மலாக்காரன்
மலா நாயக்கன்
மூப்பன்
வண்டையான்

## XII. மகளிர் பெயர்கள் (11)

கவுண்டச்சி
கோங்காயி
கோதை
சீரங்கி
செறாம்பி
சென்னம்மா
நாச்சி
நாச்சியம்மா
நாய்ச்சி
பிடாரி
மேலநாச்சி

### XIII. முறைப் பெயர்கள் (8)

அண்ணன்
அம்மா (= பாட்டி)
ஆத்தா
சின்னண்ணன்
சீயான் (=பாட்டன்)
தம்பி
நடுவண்ணன்
பெரியண்ணன்

### XIV. குலப் பெயர்கள் (17)

எமையாண்டி குலம்
கண்ணத்தன் குலம்
கண்ணன் குலம்
கள்ளா குலம்
கீழ்க்கடைக் குலம்
கோனான் குலம்
சித்தடையான் குலம்
சேத்தடையான் குலம்
சொல்லன் குலம்
திருவிச்சி குலம்
தில்லன் குலம்
பீலன் குலம்
பூசன் குலம்
மாடாயான் குலம்
மாணிக்கன் குலம்
மூகாண்டி குலம்
ராமகுலம்

### XV. தொழில் வழி - சாதிப் பெயர்கள் (15)

காராளன்
காரைக்காட்டு வெள்ளாளன்
கூத்தாரி
கூலிக்காரன்
கைக்கோளன்
கொங்கு வெள்ளாளன்
தேவேந்திரப் பள்ளன்
தொட்டியன்
பறையர்
பூசாரி
மலாக்காரன்
மலாநாயக்கன்
வேடச்சி
வேடன்
வேளாளன் (வெள்ளாளன்)

### XVI. பட்டப்பெயர்கள் (5)

ஊர்க்கவுண்டன் ( = குட்டி மணியன் = கிராமத்தலைவன்)
ஊர் மூப்பன்
கங்காணி (=கிராமத் தலைவனுக்கு உதவியாளன்)
சேலூரா் நாடு பட்டக்காரன் ( = சாதித் தலைவன்)
வளப்பூர் பட்டக்காரன்

### XVII. தானியப்பெயர்கள்(7)

கம்பு
கேழ்வரகு
சாமை
சோளம்
தினை
நெல்
ராகி

### XVIII. உணவுப் பெயர்கள் (6)

கஞ்சி
களி
குழம்பு
புளி கலக்கு (=இரசம் வை)
மோர்ப்புளி ( = மோர்க் குழம்பு
ராகிக்களி

XIX. விழாப்பெயர்கள் (7)

ஆடிப்பதினெட்டு
கோகுலாஷ்டமி
சிவராத்திரி
சீராமநவமி
தீபாவளி
பார்வேட்டை
வீட்டுச்சாமி பூசை

XX. விளையாட்டுப் பெயர்கள் (3)

ஆட்டம்
எருத்து ஆட்டம் (=மஞ்சி விரட்டு = மாட்டு விளை யாட்டு)
பார் வேட்டை

XXI. பறவைப் பெயர்கள்(2)

கோட்டான்
செம்போத்து

XII. விலங்குப் பெயர்கள்(2)

செந்நாய்
பன்றி

XXIII. ஊர்வன பெயர்கள் (2)

அரணை
செம்பூரான்

XXIV. நிலவகைப்பெயர்கள் (2)

நஞ்சை
புஞ்சை

XXV. முகத்தலளவைப் பெயர்கள் (3)

கண்டகம் (=50 வெள்ளம்)
மானம் (= சென்னை ½ படி)
வெள்ளம் (=சென்னை 3½படி)

XXVI. இசைக்கருவிப் பெயர் (1)

தம்பட்டம்

XXVII. நாட்பெயர் (1)

கரிநாள்

XXVIII. பூப்பெயர் (1)

அலரி

XXIX. வடமொழிச் சொற்கள் (27)

அபிஷேகம்
அருச்சுனன்
இரசம்
இராமம்
இலிங்கம்
இலட்சுமணன்
ஈஸ்வரன்
குரு
சகாதேவன்
தர்மர்
தர்மராஜா
திரௌபதி
தேவேந்திரன்
நகுலன்
நமஸ்காரம்
நாமம்
பீமன்
புத்
புஷ்பவதி
மண்டலம்
மந்திரி
ராம...
ராமன்
ராஜா
ராஜு

வருணபகவான்
விஷ்ணு

## XXX. இலக்கியச் சொற்கள் (15)

அம்பலன்
ஊர் மூப்பன்
எருத்து ஆட்டம்
கோதை (=பெண்)
சொல்லுடையான் (உண்மையே பேசுபவன்)
திங்களூர்
பச்சைமலை மூப்பன்
பட்டவன் (=இறத்தவன்)
பாண்டியன் (கல்) (=கற்சவப் பெட்டி)
பொல குடிசை (=புலவு குடிசை=வீட்டுக்கு விலக்கான வள் இருக்கும் குடிசை)
மீன் (=நட்சத்திரம்)
மீன் பூத்துவிட்டது (=நட்சத்திரம் தோன்றிவிட்டது)
மூப்பன்
மோர்ப்புளி (= மோர்க் குழம்பு
வெள்ளம்

## XXXI. சிறப்புப் பொருளுடைய சொற்கள் (6)

கட்டிக்கிறது (=விதவையை மணப்பது)
கலியாணம் (=கன்னியை மணப்பது)
நாட்டுக் கட்டு (=நாட்டுப்புறப் பாடல் தொகுதி)
மேனாரிகம் (=மாமன்-அத்தை மக்களை மணக்கும் முறை)
வீட்டுச்சாமி (=இறந்தவர் ஆவி)
வீட்டுச்சாமி பூசை (இறந்தவர் ஆவி அல்லது நீத்தார் வழிபாடு)

## XXXII. தத்துவச்சொல் (1)

கடவுள்

## XXXIII. பேச்சு வழக்குகள் *(12)

இருக்கிறா? (=இருக்கிறானா?
கல்லு (=கல்)
குசுவம் (= கொசுவம்)
குதிரை பாஞ்சி (=குதிரை பாய்ந்தி)
கூத்தாரி (= கூத்தாடி)
கோமணம் (=கோவணம்)
பில்லு (புல்)
பெரிய பிலி (பெரிய புலி)
மொறம் (=முறம்)
வெளியே போயிட்டா (=வெளியே போய்விட்டார்)
வேட்டக்கார்ன் (=வேட்டைக் காரன்)
வையாசி (=வைகாசி)

## XXXIV. வாழ்த்து (1)

மகராசனாயிரு

## குறிப்புகள்

1. Dr. O. R. Baron Ehrenfels: Traces of a Matriarchal Civilzation among the Kollimalaiyalis (1943)

2. F. J. Richards. I.C.S.: Madras District Gazetteer — Salem. (1918), pp. 152-64.

A. F. Cox: North Arcot District Manual (1895), pp. 211-214

W. Francis: Gazetteer of the South Arcot District (1906), pp. 106-8.

Hemingway: Madras District Gazetteer — Trichinopoly (1907), pp 123-8.

3. Edgar Thurston: Castes and Tribes of Southern India (1909), Vol. IV - pp. 406-36.

4. Manual of the Administration of the Madras Presideney, Vol. III, pp. 402-3.

5. Dr. O. R. Baron Ehrenfels: Traces of a Matriarchal Civilization among the Kollimalaiyalis (1943).

6. Dr. R. P. Sethu Pillai's Commemaration Volume (1961), pp. 253-52.

7. Encyclopaedia Britannica (1960), Vol. 14, p. 165-6.

8. இவ்வகை ஆராய்ச்சியின் பயனை அறிஞர் பலர் அழகுற விளக்கியுள்ளனர். எடுத்துக்காட்டுகள் வருமாறு.

(1) "But the linguist, who is also an anthropologist is not exclusively concerned with linguistic problems as such. He is interested also in the many inter relations between the language of a people and the other aspects of their culture. Thus, for example, he may study the ways in which the language spoken by a group of people is related to that group's status or social position, the linguistic symbols employed in religious rites and ceremonies and how these differ from ordinary, everyday speech, the ways in which the changing voabulary of a language reflects the changing culture of the people who speak it, and the processes whereby language is transmitted from one generation to another and how these processes aid in transferring beliefs, ideals and traditions to successive generations. In brief, the linguist tries to understand the role of language in human societies and the part it has played in the larger picture of man's

unfolding civilizations." — R. L. Beals and Harry Hoijer: An Introduction to Anthropology (1959), p. 14.

மலையாளிகளின் குலப்பெயர்கள் பற்றி:

(2) "Some of these **vaguppus** bear quaint and outlandish names which would afford unlimited a scope for a philologist's fancy ..." — Salem District Gazetteer (1918), Vol. I, p. 153.

9-15. இப்பெயர்கள் பற்றி எட்கர் தர்ஸ்டன் பின் வருமாறு எழுதியுள்ளார்.

"All have Goundan as their second name, which is universally used in hailing them. The first name is sometimes derived from a Hindu God, and my notes record Mr. Green, Mr. Black, Mr. Little, Mr. Short, Mr. Large, Mr. Big nose." — Castes and Tribes of S. India, Vol. IV, p. 410.

ஆராய்ச்சி அறிஞர் எட்கர் தர்ஸ்டன் இவர்கள் பெயரை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்காது தமிழ் வடிவத்திலேயே தந்திருந்தால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும்! மேலும், Mr. Stone, Mr. Wood, Mr. Drinkwater - போன்ற ஆங்கிலத் திருப்பெயர்களைத் திருவாளர்கள் கல், கட்டை, குடிதண்ணீர் என்றெல்லாம் மொழி பெயர்க்கும் 'துணிவும்' 'பண்பாடு'ம் நமக்கில்லையே!

# 2

## நேப்பாளியில் தமிழ்

### 1

பாரதநாட்டின் திருமுடியென விளங்கும் பெருமை ஒரு வகையில் நேப்பாளத்திற்கும், திருவடியென விளங்கும் பெருமை தமிழ் நாட்டிற்கும் உண்டு. புவியியல் வகையில் இத்தகு இணைப்பைப் பெற்றுள்ள இவ்விரு நாடுகட்கும் இடையே உள்ள மொழியியலுறவைச் சிறப்பாக நினைவு கூற எழுந்ததே இக்கட்டுரை.

பாரத நாட்டின் ஒருமைப்பாட்டிற்கே அடிப்படையான காரணங்கள் இரண்டே. அவை புவியியற்செல்வாக்கும் சமயவியற்செல்வாக்குமே ஆகும்.[1] ஒரு வகையில் புவியியற்செல்வாக்கையும் வலிவும் பொலிவும் பெறச் செய்வது சமயவியற்செல்வாக்கே எனலாம். இவ்வுண்மை தமிழகத்தில் பாசுபத நெறி பரவிய பான்மையால் தெளிவாகும்.[2] இன்றும் நேபாளத்தைக் கண்டு வருவோர் கூறும் வேறு செய்திகள் சிலவும் கருத்திற்கொள்ளததக்கன. அவை இவை :

'சிவராத்திரி கழிந்த சில தினங்களுக்குப் பிறகு மீண்டும் கோயிலுக்குச் சென்று பசுபதி நாதரைத் தரிசித்தோம். அங்குப் பூஜை செய்யும் குருக்கள்மாருள் ஒருவர் கன்னட பாஷைக்காரர் என்று கூறினார்கள்.'[3]

'இந்துக்களிலே சைவம், வைணவம் என்ற பிரிவுகள் இருக்கிறதல்லவா? இந்தப் பிரிவுகளிலே சைவந்தான் நேபாளத்தில் ஆட்சி செலுத்துகிறது. விக்கிரகம் ஒன்றைப் பார்த்தோம். ஒரே செம்பு விக்கிரகத்தில் பாம்பின்மேல் கருடன், கருடனுக்குமேல் விஷ்ணு, விஷ்ணுவின்மேல் சிவ

பெருமான் இம்மாதிரியாகக் காணப்பட்டது. நேபாளத்தில் பிள்ளையார் கோவில்கள் அதிகம். வீதிக்கு வீதி, மூலைக்கு மூலை பிள்ளையார் கோவில்கள்தான். நேபாளப் பிள்ளையாருக்குத் தும்பிக்கை நேராயிருக்கும். நேபாள நடராஜர் மீசை வைத்துக்கொண்டிருக்கிறார்!' [4]

*

'பசுபதிநாதருடைய கர்ப்பக் கிரகம் நான்கு வாயில்களை உடையது. .........எதிரே நின்ற கோலத்தில் எழுந்தருளியிருக்கிறார் நந்தி. கோயில் மரத்தால் அமைக்கப்பட்டது. மலையாளத்துக் கோவில்களைப் போல அடுக்கு நிலைகள் அமைந்ததாக விமானம் அமைக்கப்பட்டிருக்கிறது.'[5]

*

'பெருமான் இந்த நிலையில் நேபாளத்தில் எழுந்தருளியிருந்து எல்லா உயிர்களையும் காத்து அருள் வழங்கி நிற்கிறான். தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன் என்ற முழக்கத்தின் திருவுருவாகப் பெருமான் அங்கே எழுந்தருளியிருக்கிறான். உலகப் பகுதிகள் எல்லாவற்றிலும் அவனுடைய கருணைப் பெருவெள்ளம் பெருகி நின்று காத்து வருகிறது என்பதற்கு எடுத்துக்காட்டாக எல்லாத் திசைகளையும் பார்க்கும் திருமுகங்கள் நான்கும், அருவ நிலையில் ஒரு முகமும் ஆக ஐந்து திருமுகங்கள் கொண்டு விளங்குகிறான். இதேபோன்ற திருவுரு தமிழ் நாட்டில் திருவக்கரை என்னும் தலத்தில் அமைந்திருக்கிறது'.[6]

*

'அநந்த பத்மநாச அடிகளிடம் இரண்டாநாள் இரவு பேசிக் கொண்டிருக்கும்போது நேபால நாட்டிலுள்ள இக் கோவிலுக்குத் தாங்கள் எப்படிப் பூசகராக வந்து சேர்ந்தீர்கள்? வடகன்னட நாட்டுத் திருக்கோகர்ணத்திலிருந்து இங்கு வரக் காரணம் என்ன? அங்கே உங்களுக்குப் பூசை முறை இருப்பதாகத் தெரிகிறதே என்று பொழுதுபோக்காகச் சில கேள்விகளைக் கேட்டு வைத்தேன்.

அடிகள் : 'உண்மைதான். வடகன்னட நாட்டில் பிராமண வகுப்பில் எங்களுக்கு நல்ல மதிப்புண்டு. நாங்கள் தமிழில் வழங்கும் அடிகள்[7] என்ற சிறப்புப் பெயரைப் பெற்று வாழ்கிறோம். பட், சாஸ்திரிகள் என்ற சிறப்புப்

பெயர்களும் உண்டு. எங்கள் குடும்பப் படித்த குடும்பம். சங்கரர் இந்நாட்டுக்கு வருமுன் பசுபதி நாதருக்கு நரபலி, மது மாமிசம் முதலியன படைத்து வழிபாடுகள் செய்து வந்தார்கள் என்பதை நேற்று உங்களுக்குச் சொன்னேன் அல்லவா?

'சங்கரர் வருவதற்கு முன்னர், இந்நாட்டில் சந்நியாசிகள் பெருமானைப் பூசித்து வந்தனர். இங்கு பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்று சாதிப் பிரிவினைகள் இருந்து வருகின்றன. எல்லோரும் மது மாமிசம் அருந்தக்கூடியவர்கள். ஆகார விஷயத்தில் இங்கு அதிக வேற்றுமை கிடையாது. பெருமானுக்குப் பலியிடுதலும் மதுமாமிச நைவேதனமும் கூடாவென்று சங்கரர் நிறுத்திவிட்டார். அந்தப் பழக்க வழக்கங் களுடைய இந்த நாட்டுப் பிராமணர்கள் பெருமானைத் தொட்டுப் பூசித்தல் அநுசிதம் என்று அப்போதிருந்த அரசனிடம் எடுத்துச் சொல்லிச் சுத்த சைவர்களா யுள்ள பிராமணர்கள் தாம் பூசை செய்ய யோக்கியதை உடையவர்கள் என்பதையும் அரசனுக்குத் தெரி வித்தார்.

அப்படிச் சுத்த சைவர்களாக உள்ளவர்கள் எங் கிருந்து கிடைப்பார்கள் என்று கேட்ட அரசனுக்கு, விந்தியப் பிரதேசத்தின் தெற்குப் பகுதியில் உள்ள பிராமண வகுப்பார் நெறியிற் சிறந்தவராகவும் (ஸ்மார்த்த வைஷ்ணவர்கள்) சைவர்களாகவும் இருப் பார்கள். அங்கிருந்து படித்த நல்ல அறிஞர்களை ஒழுக் கத்திற் சிறந்தவர்களைப் பொறுக்கியெடுத்துப் பூசைக்கு வைத்துக் கொள்ளலாம் என்று அவர் ஒரு திட்டமும் வகுத்துக் கொடுத்தார். முதலில் கன்னடப் பிரதேசத்தில் உள்ளவர்களில் தேர்ந்தெடுக்கலாம். அதுவும் பொருந் தாவிட்டால் ஆந்திர நாட்டிலிருந்து தேர்ந்தெடுக்கலாம். இந்த மூன்றிலும் இதற்குப் பொருத்தமாக யாரும் கிடைக்காவிட்டாலும் விந்தியத்திற்குத் தெற்குப் பகுதி யிலுள்ள எந்த நாட்டு வைதிக பிராமண குலத்திலுள்ள வர்களிலும் பொருத்தமானவரை எடுக்கலாம்'.[8]

'கோதாவரி—என்ற ஊர் உண்டு. தென்னிந்தியத் தொடர்புள்ள நேபால சின்னங்களுள் இதுவும் ஒன்று.'[9]

2

தொன்றுதொட்டு நேப்பாளத்திற்கும் நமக்கும் உள்ள நல்லுறவை இன்றும் நமக்குச் சிறப்பாக நினைவுபடுத்தும் சீர்மை அந்நாட்டின் தலைநகரின் பெயராகிய 'காட் மண்டி'ற்கே உண்டு. காஷ்ட மண்டபமே 'காட்மண்டு'. காஷ்டம் தமிழ்க் கட்டையே எனில்[10] நேப்பாளத்தின் தலைநகரின் பெயருக்கே உயிர் தரும் ஒரு சொல் தமிழ்ச் சொல்லே. இன்னொரு வகையான நம் கால உறவு வீரம் செறிந்த அந்நாட்டின் குடி மக்களாகிய கூர்க்கருள் 245 மகளிர் உட்பட 1325 பேர் தமிழ் நாட்டில் பெரும்பாலும் பண்டை யவனர் போலக் காவலாளிகளாய் வாழ்வதே ஆகும்.[11]

3

தென்னகத்துடன் இத்தகு தொடர்புடைய நேப்பாளத்தின் மொழியாகிய நேப்பாளியின் முதற்பெருஞ்சொற் களஞ்சியம் 1930-ஆம் ஆண்டில் வெளி வந்தது. அதன் ஆசிரியர் பேராசிரியர் டர்னர் (R. L. Turner). ஏறத்தாழ ஆயிரம் பக்கங்கள் கொண்ட இச்சொற்களஞ்சியம் பல வகைகளிலும் எடுத்துக்காட்டானதொரு சொற்களஞ்சிய மாய்த் திகழும் பெருமை சான்றது. இச்சொற்களஞ்சியத்தில் உள்ள இருபத்தாறாயிரம் நேப்பாளிச் சொற்களும் அவற்றிற்குரிய தேவநாகரி எழுத்திலும் ஆங்கில எழுத்திலும் தரப்பட்டுள்ளன. அவற்றிற்குரிய பொருள் ஆங்கிலத்தில் தரப்பட்டுள்ளது. பெரும்பாலும் ஒவ்வொரு நேப்பாளிச் சொல்லின் வேர் பற்றிய ஆய்வும் அச் சொல்லிற்குரிய ஒப்புச் சொற்களும் காட்டப்பட்டுள்ளன.

'நேப்பாளி ஒப்பியல் - பிறப்பியல் சொற்களஞ்சியம்' என்ற பெயருக்கு ஏற்ற பெருமைசான்ற இப்பெருநூலைப் பேராசிரியர் டர்னர் பதினாறாண்டுகள் பாடு பட்டு உரு வாக்கியுள்ளார்.[12] இப்பெரும் படைப்புக் கருக்கொண்ட இடம் அல்மோராவின் (Almora) கூர்க்காக் கோட்டையின் அடிவாரம்![13] பேராசிரியர் டர்னர் கடும்போர்ப்பணியில் ஈடு பட்டிருந்த காலம் இச்சொற்களஞ்சியம் சூல் கொண்ட காலம்.'[14]

4

நேப்பாளியில் வழங்கும் தமிழ் வேருடைய சொற்கள் சிலவற்றின் அகர வரிசை வருவாறு:

| நேப்பாளிச் சொல் | பொருள் | தமிழ்ச்சொல் |
|---|---|---|
| ஒக்லி | உலக்கை | உலக்கை |
| கர் | கட்டி, கழலை | கழலை |
| காலோ | கறுப்பு | கார்* |
| காஜல் | (கண்ணுக்கிடும்) மை | கருமை* |
| குட்நு | அடி, நொறுக்கு, | குட்டு; கொட்டு |
| கொர்நு | சுற்றல், சுழலல் | கிறுகிறுப்பு |
| சஙர் | படிக்கட்டு | சங்கடம் (= ஒடுக்க வழி. இப்பொருளில் யாழ்ப்பாணத்தில் வழங்குகிறது.) |
| சிலோ | மாணவர் | சில, சிறு* |
| சுருட் | சுருட்டு; சுருட்டுக் குடியன். | சுருட்டு* |
| டண்டா | குளிர்ந்த | தண்(மை)* |
| தல் | தாளம் | தாளம் * |
| தாரோ | தாடை | தாள்; தாடை |
| தாலோ | தாழ்ப்பாள் | தாழ்; தாள் |
| போல்நு | பேசு | வகுளி; வகுணி* (= ஒலி) |
| பௌரநு | மிக, நீந்து | தேலு(தல்); தேறு(தல்)* |
| மார்நு | தேய்; அடி; சுருட்டு | மண்; மண்ணு(தல்)* |
| மிசிநு | தேய்; அழுத்து;பிழி. | மின்? * |
| முஸல் | உலக்கை; உலக்கை மசிநுனி; மா(வு) | |
| யுஜார்நு | அழி | * சரி? |
| ஜர்நு | பொருத்து | சடை(தல்) |
| ஜரி | மழைபொழிதல் | சொரி? * |
| ஹலிநு | அலைத்தல் | அலை |
| ஹலுகொ | மெல்லிய | அலை * |
| ஹெர்நு | பார்; காண் | பார்? * |

## 5

பேராசிரியர் டர்னர் நேப்பாளிச் சொற்கட்கு வேர்ச் சொல் விளக்கம் காட்ட வழங்கும் திராவிடச் சொற்களென பிராகுவி (4), கன்னடம் (27), கோண்டி (5), கூய் (1), குருக் (5), மலையாளம் (1), தமிழ் (16), தெலுங்கு (19), தொதுவர் மொழி (2), துளு (1) ஆகிய மொழிச்சொற்களைத் தனித் தனியே பட்டியலிட்டுத் தந்துள்ளார். அப்பட்டியல்களை ஆய்ந்து எந்த நேப்பாளிச் சொல்லிற்கு எந்தெந்தத் திராவிட மொழிச் சொற்கள் ஒட்பிட்டுக் காட்டப் பட்டுள்ளன என்பது எளிதில் விளங்கும்பொருட்டுப் பின் வரும் பட்டியல் அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ்ச்சொற்கள் பல வடமொழியில் திரிந்து வழங்கும் திற முணர இப்பட்டியல் துணை புரிதல் கூடும். பேராசிரியர் டர்னர் காட்டாத திராவிட ஒப்புச் சொற்களும் இப்பட்டிய லில் காட்டப்பட்டுள்ளன. அவற்றின்மேல் உடுக்குறி இடப்பட்டுள்ளது. தமிழ் தவிரப் பிற திராவிட மொழிச் சொற்களின் ஒலி வடிவைப் பேரளவு சரியாக உணர்த்தும் வகையிலேயே தமிழ் வரி வடிவு தரப்பட்டுள்ளது. ஆயினும், தமிழ் எழுத்துக்களைக்கொண்டே பிற மொழியொலிகளை எல்லாம் குறிக்கும் முறை முன்னும் பிறவாமை மறவாமைக் குரியது. பட்டியல் வருமாறு :

| | |
|---|---|
| ஒக்லி— | உலக்கை (தமிழ்) |
| | வாஸ்க் (தொதுவர் மொழி) |
| கர்— | கழலை (தமிழ்) |
| | கடுவு (தெலுங்கு) |
| | கட்டா ( ,, ) |
| | கட்டே ( ,, ) |
| காலோ— | கார் (தமிழ்)* |
| | கரா (தெலுங்கு) |
| | காடு (கன்னடம்) |
| | கோச |
| காஜல்— | ( ,, |
| குட்நு— | குட்டு (தமிழ்) |
| | கொட்டு ( ,, ) |
| | கொட்டு (தெலுங்கு) |
| | குடு (கன்னடம்) |
| | குட்டு ( ,, ) |

| | |
|---|---|
| | குடுர் (பிராகுவி) |
| | குரும் (கோண்டி) |
| | க்சாட் (குருக்கு) |
| கெர்நு— | கிறுகிறு (தமிழ்) |
| | கிரகிரா (தெலுங்கு) |
| | கிரி ( ,, ) |
| | கிட் (பிராகுவி) |
| | கிர்கிர் (குருக்கு) |
| சஙர்— | சங்கடம் (தமுழ் |
| | ஜங்கலா (துளு) |
| சிலோ— | சில (தமிழ்) |
| | சில்லர (கன்னடம்) |
| | சில்லு ( ,, ) |
| | சிறு ( ,, ) |
| சுருட்— | * சுருட்டு (தமிழ்) |
| | சுருட்டு (மலையாளம்) |
| டண்டா— | * தண்மை (தமிழ்) |
| | தடி (தெலுங்கு) |
| | தண் ( ,, ) |
| | தண்டி ( ,, ) |
| | தணிட் (தொதுவர் மொழி) |
| தல்— | தழும்பு (தமிழ்) |
| | * தட்டு ( ,, ) |
| | * தட்டு (தெலுங்கு) |
| | தட்டு (கன்னடம்) |
| தாரோ— | தாடை (தமிழ்) |
| | தாள் ( ,, ) |
| | தவடை ( ,, ) |
| | தவடா (தெலுங்கு) |
| | தவடெ (கன்னடம்) |
| போல்நு— | வகுளி (தமிழ்) |
| | * வகுணி ( ,, ) |
| | பொப்ப (தெலுங்கு) |
| | பகுளு (கன்னடம்) |
| | பொப்பே ( ,, ) |
| | பொகளு ( ,, ) |
| பௌரநு— | * தேலு தல் (தமிழ்) |
| | தேறுதல் ( ,, ) |

| | |
|---|---|
| | தேல் (தெலுங்கு) |
| | தேல் (கன்னடம்) |
| | தார் (பிராகுவி) |
| மார்நு— | மண் (தமிழ்) |
| | மாடு (கன்னடம்) |
| மிசிநு— | * மின் (தமிழ்) |
| | மிச்சு (தெலுங்கு) |
| | மிக்கி ( ,, ) |
| முஸல்— | * மசி (தமிழ்) |
| | மசெ (கன்னடம்) |
| | மசகு ( ,, ) |
| | மசிட் (கோண்டி) |
| | மசோல் ( ,, ) |
| | மஸ்மசர் (குருக்கு) |
| யுஜார்நு— | * ? சரி (தமிழ்) (= அழி) |
| | ஜட (கன்னடம்) |
| | ஜடெ (தெலுங்கு) |
| ஜர்நு— | சடை (தமிழ்) (= பொருத்து) |
| | ஜட்ட (கன்னடம்) |
| | ஜடி ( ,, ) |
| ஜரி— | * ? சொரி (தமிழ்) |
| | ஜிடி (கன்னடம்) |
| | ஜடி (தெலுங்கு) |
| ஹலிநு— | அலங்கு (தமிழ்) |
| | அலை ( ,, ) |
| | அலசு (தெலுங்கு) |
| | அலசு (கன்னடம்) |
| | அலகு ( ,, ) |
| | அலெ ( ,, ) |
| | அலுகு ( ,, ) |
| ஹலுகொ— | * அலை (தமிழ்) |
| | அலகனா (தெலுங்கு) |
| ஹொர்நு— | * ? பார் (தமிழ்) |
| | ஹிர் (பிராகுவி) |
| | ஹீர் (கோண்டி) |
| | ஏர் (குருக்கு) |
| | இர் ( ,, ) |

## 6

மேற்கண்ட பட்டியலில் உள்ள நேப்பாளிச் சொற்கள் பல தமிழ் வேருடையனவே என்று நாம் உணரப் பேராசிரியர் டர்னரே மேற்கோளாகக் காட்டும் பேராசிரியர் யூல் பிளாக் அவர்களின் கருத்துகள் சிலவற்றை மேலுள்ள பட்டியலில் உள்ள சொற்களின் அகர வரிசைகளைத் தழுவியே ஈண்டு முறைப்படுத்தியிருத்தல் பொருத்தமும் பயனும் உடையதாகும். அவ்வாறு முறைப்படுத்தப்பட்ட கருத்துகள் வருமாறு:[15]

**ஒக்லி :**

'சோமா இலையை இடிக்கும் உரல் உலூக்கல (ரிக் வேதம் I, 28, 6). இது உலக்கை (தமிழ்), வஸ்க் (தொதுவர் தொதுவர் மொழி), ஒனகே (கன்னடம்) ஆகிய திராவிடச் சொற்களை நினைவூட்டுகிறது'.

**கர் :**

'சிறு உடல் நோய்கட்கும் அவர்கள் (ஆரியர்கள்) திராவிட மொழிச் சொற்களையே வழங்கியதாகத் தோன்று கிறது. கண்ட (ஐத்திரேயம்) 'கட்டா', 'கடுவு' (தெலுங்கு), கட்டெ (கன்னடம்), 'கழலை' (தமிழ்), 'கட்டு' (தெலுங்கு) ஆகிய சொற்களும் ஒரே வேருடையனவே ஆகும்'.

**காலோ :**

**காஜல் :**

'கால' என்னும் பகுதியே கருமை என்ற பொருள் தரும். கன்னட – காடு, தெலுங்கு – கரா, 'கறுப்பாக்க' என்னும் பொருள் தரும் கன்னட 'கழ்கு', கரும்பொருளைக் குறிக்கும் கோண்டி – கோசோ, பொதுவாகத் திராவிட மொழிகட் குரிய 'கார்' ஆகிய சொற்களின் வேராக இருத்தல் வேண்டும். இதே சொற்குடும்பத்தைச் சார்ந்ததே கன்னட– காடிகெ, தெலுங்கு – கடிகெ. இச்சொற்கள் சமஸ்கிருதம் – கஜ்ஜல, இந்தி – காஜல், காலிக் ஆகிய சொற்களை நினை வூட்டும்.'

**குட்னு :**

'பேராசிரியர் கிட்டல் குடு (கன்னடம்), குட்டு (கன்னடம், தமிழ்) கொட்டு (தெலுங்கு) ஆகியவற்றை ஒப்

பிட்டுக் காட்டுகிறார். இதனுடன் அரிசி குற்றுதல் என்னும் பொருள் தரும் கொட்டு (கன்னடம், தெலுங்கு), 'நொறுக்கு' என்னும் பொருள் தரும் 'கோர்ஸ்', 'கோஸ்' (குருக்கு) ஆகிய சொற்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.'

கெர்னு :

'சுற்றளவு என்னும் பொருள் தரும் கேர் (இந்தி), மயக்கம் என்னும் பொருள் தரும் கிர்னீ (இந்தி), கெரீ (மராத்தி), கழல் என்னும் பொருள் தரும் கிர்த்தீ (மராத்தி) கயிறுகளைச் சுற்றும் சக்கரம் என்னும் பொருள் தரும் கிரின் (இந்தி) போன்ற இன்னும் பல இதே வேருடைய சொற்கள், சுற்று என்னும் பொருள் தரும் 'கிரி' (தெலுங்கு) சுற்றாய், மயக்கமாய் என்னும் பொருள் தரும் 'கிரகிரா' (தெலுங்கு) ஆகிய சொற்களை நினைவூட்டுகின்றன. 'கிறு கிறு' என்னும் தமிழ்ச்சொல்லின் பொருளே இவற்றின் பொருளும். குருக் மொழியில் 'விரைவுறு' என்னும் பொருள் தரும் சொல் 'கிர்கிர்'; பிராகுவியில் 'உறக்கத்தால் கிறங்கு' என்னும் பொருள் தரும் சொல் 'கிட்'.

டண்டா :

'உரிச்சொற்களைப் பொறுத்த வரையில் பெரிதும் வழக்குடைய ஒரு சொல்லைப்பற்றி மட்டும் குறிப்பிட்டு அமைவேன். 'குளிர்ச்சி' என்னும் பொருள் தருவனவாய தண்ட் (மராத்தி), இந்தி, 'டண்டா' ஆகிய சொற்கள் உள்ளன. இவை 'குளிர்ச்சி' என்னும் பொருள் தரும் 'தண்' (தமிழ், கன்னடம்), தாண்ட் (தொதுவம்), ஈரம் என்னும் பொருள் தரும் தடி (தெலுங்கு, கன்னடம்) ஆகிய சொற்களின் வேரினும் வேறானவையாக இருக்கவே இயலாது. இச்சொல் திராவிட மூலம் உடையதாவதற்கு இவ்வேரினின்றும் எழுந்த திராவிடச்சொல் வடிவங்களின் வகை வளமும் மூக்கொலியின் மாறுதலுறும் பண்பும் பெருந்துணை புரிவனவாகும்.

'இச்சொல் குடியேற்ற நாட்டு ஆங்கிலத்திலும் குடி புகுந்துவிட்டது. 'மிளகுத் தண்ணீர்' என்பதில் உள்ள 'தண்ணீர்' என்பதற்குரிய பழம்பொருள் தண்ணிய (குளிர்ந்த) நீர் என்பதே ஆகும். இக் கூட்டுச் சொல்லில் உள்ள முதற்பகுதியைக் கடனாகப் பெற்றதன் பயனே இந்தி 'டண்டா'வும் சமஸ்கிருத 'நீரம்' என்ற சொல்லும்.'

தல் :

'நிருக்தத்தில் குறிக்கப்பெறும் வினைப்பொருளுடைய வேர் 'தட்'. இது 'அடி' என்னும் பொருள் உடைய 'தாளெட்தி' என்னும் பாலிச் சொல்லிலும் உள்ளது. அதர்வ வேதம் 'ஓர் அடி' என்னும் பொருளுடைய 'தாட' என்னும் சொல்லைப் பெற்றுள்ளது. இந்த சம்ஸ்கிருத 'தட்' என்னும் சொல்லுக்கு ஆரியத்தில் சிறந்த வேர்ச்சொல் ஏதும் இல்லை. மாறாக 'அடி' என்னும் பொருள் உடைய தட்டு (கன்னடம்-தமிழ் – தெலுங்கு) என்ற சொல்லும் 'எதிர்த்து அடி', என்னும் பொருளுடைய 'தட்டு' என்ற கன்னடச் சொல்லும் 'வடு' என்னும் பொருள் தரும் 'தழும்பு' என்ற தமிழ்ச் சொல்லும் ஒப்பிட்டு நோக்கற்குரியன'.

தாரோ:

'தாடியைக் குறிக்கும் தாதிக (மனு), தாடி (இந்தி) ஆகிய சொற்கள் 'தம்ஷ்ட்ர' என்ற வேர்ச்சொல் உடையன என்பதை ஒலியியல் வகையாலோ சொல்லியல் வகை யாலோ எளிதில் விளக்க இயலவில்லை. ஆனால், அச் சொற்கள் தாடைக்குரிய தமிழ்ச்சொற்களாகிய தாள், தாடை, தவடை ஆகியவற்றையும் தவடெ (கன்னடம்) தவடா (தெலுங்கு) ஆகியவற்றையும் நினைவுறுத்துகின்றன.

போல்னோ :

'பலர்' விழை பண்பும் அதனால் உணர்ச்சி விளக்கமார் பண்பும் பெற்றுள்ள சரிநுட்பக் காரணங்களால் பற்றியே அண்மைக் காலத்தில் திராவிடத்திலிருந்து கடன் வாங்கப் பட்ட உரிச்சொற்களும் வினைச் சொற்களும் உள என்று நான் நம்புகிறேன்.

'அவ்வாறு கடன்கொண்ட வேர்ச்சொற்களுள் ஒன்று 'பேச' என்னும் பொருளுடைய 'போல்' என்பதாகும். இச் சொல் திவ்வியாவனத்தில் பயன் படுத்தப்பட்டுள்ளது. அதைப் 'ப்ரு' என்னும் வேருடையதென விளக்க யான் தயங்குகிறேன். ஆனால், 'போல்', என்னும் சொல்லோடு ஒலி என்னும் பொருளுடைய 'வகுளி' (தமிழ்) 'பகுளு' 'பொகளு' (கன்னடம்) ஆகிய சொற்களையும் 'பொப்பெ' (கன்னடம்) 'பொப்ப' (தெலுங்கு) ஆகிய சொற்களையுங் கூட ஒப்பிடலாம்.'

பௌரனு :

'புதிய மொழிகளில் அசைவு அல்லது பெயர்ச்சியைச் சுட்டும் சில வினைச்சொற்கள் உள்ளன. 'நீந்து, மித' என்னும் பொருள் தரும் தைர்னா (இந்தி) என்னும் சொல்லுக்குத் தர், திர் ஆகியன வேர்ச்சொற்களாக இருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஆனால், 'தேல்' (கன்னடம், தெலுங்கு), தார் (பிராகுவி) ஆகிய சொற்கள் நினைவுக்கு வருகின்றன.'

மார்னு :

'பாரதம், பாலியில் உள்ள 'மண்டயதி' என்னும் சொல்லுக்கும் 'செய்ய' என்னும் பொருள் தரும் 'மாடு' (கன்னடம்), 'அணிசெய், மெருகிடு' என்னும் பொருள் தரும் 'மண்' (தமிழ்), 'அணி செய்' என்னும் பொருள் தரும் 'மேஜ்' (கூய்), வீடு என்னும் பொருள் தரும் 'மாடம்' (தமிழ்), 'மாளிகை' (தெலுங்கு) ஆகிய சொற்கட்கும் பொதுவான தொரு வேர் உண்டு என்றே நான் கருதுகிறேன்.'

மிசினு :

'மீனைக் குறிக்கும் பழைய ஆரியச் சொல் 'மத்ஸ்ய' என்பதே. அமரத்திலும் மனுவிலும் 'மீன' என்ற சொல் இருக்கிறது. ஆனால், நமக்குத் தெரிந்த வரையில் பாலியில் இல்லை. இது மீன் (தமிழ், கன்னடம், கோண்டி), மீனு (கூய்) ஆகும்'

முஸல் :

'இது வரை நாம் பார்த்த வடமொழிச் சொற்களுடன் திராவிட மூலம் காணக்கூடிய எச்சொல்லும் ரிக் வேதத்தைச் சார்ந்ததாய் இல்லை. ஆனால், அதற்கு ஒரு சான்றைத் தானியங்களை மாவாக்கும் கலை நமக்கு வழங்கும் என்று கருதுகிறேன். உலக்கையைச் சுட்டும் அதர்வ மறை – பாலிச் சொல்லாகிய 'முஸலா'வில் உகரத்தை ஸகரம் தொடர்வதாலும் லகரம் உண்மையாலும் பலரறிந்த சொல்லாகும். இச்சொல்லைப் பேராசிரியர் வாக்கார்நகல் அதர்வ மறை[15] 23, 8. மஷ்மஷாகரம் என்ற சொல்லோடும் ஒப்பிடுகிறார். ஆரியத்தில் 'நசுக்கு' என்னும் பொருள் தரும் 'மஸ்' அல்லது 'ம்ர்ஷ்' என்னும் பழைய வேர்ச்சொல் ஏதும் இல்லை. மாறாகத் 'தேய், அரை, மெரு

கிடு, கூராக்கு' என்னும் பொருள் தரும் 'மசெ', 'மசகு' (கன்னடம்), கோது, தேய் என்னும் பொருள் தரும் 'மசம சார்' (குருக்கு), சாணைக்கல் என்னும் பொருள் தரும் 'மசோல்' (கோண்டி) என்னும் சொற்கள் உள. நசுக்கு என்னும் பொருள் தரும் மசல்னா (இந்தி) திராவிடத்தி னின்றும் நேரே ஆரியத்தில் குடி புகுந்திருத்தல் கூடும்.

ஹலிநு, ஹலுகா :

'கிளர்ச்சியுறு' என்னும் பொருள் தரும் ஹில்னா (இந்தி), ஹல்ணே (மராத்தி), ஹால்வு (குசராத்தி), போக என்னும் பொருள் தரும் ஹல்னு (சம்ஸ்கிருதம்), உலுக்கு என்னும் பொருள் தரும் ஹல்னா (பிரிஜி), ஹால்னா (இந்தி,) அலராவுன் (காஷ்மிரி) ஆகிய சொற்களின் சுற்றமாய சொற்கள் பல உள. எடையற்ற என்னும் பொருள் தரும் ஹலூ ஹல்கா (இந்தி) சொற்களும் இங்குச் சேர்த்து எண்ணத்தக்கன. அவ்வாறே அலை என்னும் பொருள் தரும் ஹல்கா, ஹில்க், கில்கோரா ஆகிய பெயர்களும் கருதத் தக்கன. திராவிடத்தில் 'கிளர்ச்சி செய்' என்னும் பொருள் தரும் வினைச்சொற்கள் பலவுள. அவை அலெ (கன்னடம்), அலை (தமிழ்), அலுகு (கன்னடம்), அலங்கு (தெலுங்கு) அசைக்க என்னும் பொருள்தரும் அலகு, அலசு (கன்னடம்) தொந்தரை தருதல் என்னும் பொருள்தரும் அலசு (தெலுங்கு) ஒளி, நிறை, புலமை ஆகிய பொருள்தரும் அலக்கனா (தெலுங்கு), சுறுசுறுப்பு அல்லது விரைவு என்னும் பொருள்தரும் எலகி (கூய்), அலை என்னும் பொருள்தரும் 'அலா' (தெலுங்கு) அலெ (கன்னடம்), அலை (தமிழ்) ஆகிய சொற்கள் கருதத்தக்கன.'

ஹெர்நு :

'பிராகிருதத்திலும் இக்கால இந்தோ - ஆரியத்திலும் 'பார்க்க' என்னும் பொருள் தரும் 'ஹெர்' என்னும் வேர் இருக்கக் காண்கிறோம். இது ஹிர் (பிராகு), ஏர் (குருக்கு), ஹீர் (கோண்டி), இரு (தெலுங்கு) ஆகிய வடதிராவிடப் பேச்சுகளில் இருக்கக் காண்கிறோம்.'

இவ்வாறு பேராசிரியர் பிளாக் விளக்கும் கருத்துகளால் தெளிவாகும் உண்மை ஒன்று உண்டு. அது மேற்படி சொற்கள் திராவிடக் கடன் சொற்களே என அவர் துணி

வதன் தலைமைக் காரணம் அச்சொற்கட்கு வடவாரிய மொழிகளில் சரியான வேர்ச் சொல் இன்மையும் மாறாகத் திராவிட மொழிகளில் ஏற்ற வேர்ச் சொற்களும் ஒப்புச் சொற்களும் உண்மையுமே ஆகும்.

## 7

மேலுள்ள பட்டியலைக் கண்டோர் கருத்திற்கொள்ளத் தக்க குறிப்புகள் சிலவுள. அவையாவன ;

1. பேராசிரியர் டர்னர் மேற்கண்ட நேப்பாளிச் சொற்கள் தமிழ் வேருடையன என்று கருதுவதன் காரணம் பெரும்பகுதி அச்சொற்கள் பற்றிப் பேராசிரியர் யூல் பிளாக் அவர்கள் அந்த நேப்பாளிச் சொற்கட்கு வடவாரிய மொழிகளில் தக்க வேர்ச் சொற்கள் இன்மையாலும் மாறாகத் திராவிட ஒப்புச் சொற்கள் உண்மையாலும் அவ்வாறு செய்த முடிவுகளே ஆகும்.

2. நேப்பாளியில் வழங்கும் இத்தமிழ்ச் சொற்கள் வேறு பல வடவாரிய மொழிகளுள்ளும் வழங்குவதையும் இத்தமிழ்ச் சொற்கள் பலவற்றின் திராவிட ஒப்புச் சொற்களையும் பேராசிரியர் டர்னரின் சொற்களஞ்சியம் விளக்குகிறது.

3. மேற்காட்டிய நேப்பாளியில் வழங்கும் தமிழ் வேருடைய சொற்களின் கூட்டுச் சொற்கள் பல உள. அவை யாவும் மேற்காட்டிய பட்டியலில் இடம் பெறவில்லை.

4. தென்மொழிச் சொற்கள் (இக்கட்டுரையில் காட்டப் பட்டவையும் பிறவும்) வடவாரிய மொழிகளில் திரிந்து வழங்கும் திறம் அடிக்குறிப்புகள் 15, 16-இல் குறிப்பிடப் படும் நூல்களால் விளங்கும்.

5. * இக்குறி பெற்ற தமிழ் வேர்ச்சொற்கள் பேராசிரியர் டர்னரால் தமிழ் மூலச் சொற்களாகக் காட்டப்படாதவை. ஆயினும், ஏற்ற தமிழ் வேர்ச்சொற்கள் இவையாயிருக்கலாம்.

6. ** இக்குறி பெற்ற நேப்பாளிச் சொல் திராவிடக் கடன் சொல்லாகப் பேராசிரியர் டர்னரால் காட்டப்பட

வில்லை. ஆயினும், அது திராவிடக்கடன் சொல்லாக இருத்தல் கூடும். இது போன்ற இன்னும் கண்டு பிடிக்கப் படாத திராவிடக் கடன் சொற்கள் வேறு பலவும் ஆரிய மொழிகளில் இருத்தல் கூடும்.

7. மேற்போக்காகக் காணும்போது வடமொழிச் சொற் களாய்த் தோற்றமளிப்பன பல ஆராயுமிடத்து உண்மை யில் தென்மொழிச் சொற்களாகவே திகழ்கின்றன.

8. நேப்பாளியில் தமிழ்ச்சொற்களைக் காண்பது ஆரிய மொழிகளில் ஆயிரத்துக்குக் குறையாதுள்ள திராவிடச்[16] சொற்களை இனங் கண்டுகொள்ளும் இன்பப் பெருமுயற்சியின் ஒரு சிறு கூறே ஆகும்.

9. ஆரிய மொழிகளில் திராவிடக் கடன் சொற்களைக் கண்டு காட்டும் முயற்சியின் வெற்றி ஆரிய திராவிட மொழிப் புலமையோடு கூடிய நடுவு சார்ந்த நன்னெஞ்சங் களைப் பொறுத்தே உள்ளது.

10. உயர்வு தாழ்வு மனநிலையும் விருப்பு வெறுப்பு உளநிலையும் இன்றி ஒரு மொழியில் கலந்துள்ள பிற மொழிச் சொற்களை அறிந்து அறிவிப்பது மனிதகுல ஒருமைப்பாட்டிற்கு உறுதுணை புரியும்.

## 8

அண்மையில் (1961) வெளி வந்துள்ள திராவிடச்சொற் பிறப்பியற்களஞ்சியம் பேராசிரியர் டர்னர் முயற்சிக்குப்பின் முப்பத்துநான்கு ஆண்டுகளாக வளர்ந்து வந்துள்ள திராவிட மொழி ஆய்வின் (சிறப்பாகப் பேராசிரியர் பர்ரோ ஆரியத் தில் உள்ள பல நூறு திராவிடச் சொற்களை விளக்கியுள்ள மையின்) பயனாக விளங்கும் பெருமை படைத்தது. அந் நூலின் இறுதியில் பிறமொழிகளில் உள்ள திராவிடக் கடன் சொற்கள் மொழிவாரிப்பட்டியல்களில் முறைப்படுத்தப் பெற்றுள்ளது. அவற்றுள் நேப்பாளிச் சொற்களெனத் தரப்பட்டுள்ளவை மட்டும் நூறு. அவற்றை ஆய்வார் நேப்பாளி மொழியில் உள்ள தமிழ்க் கடன்சொற்களின் வகையையும் வளத்தையும் மேலும் விரிவாக அறிந்து இன் புறுவர்.[17]

## குறிப்புகள்

1. (i) Dr. R. M. Mookerji — The Fundamental Unity of India — (Bharatiyo Vidya Bhavan — 1960) pp. 11—44.

2. (ii) N. Sanjeevi — 'The concept of Indian Unity in Ancient Tamil Literature' — Journal of the University of Madras (Section A) — Vol. XXXIII — No. 2 (1962).

2. டாக்டர் மா. இராசமாணிக்கனார் — சைவசமய வளர்ச்சி, பக். 163.

3-4. ஏ. கே. செட்டியார் — 'நேபாளம்' — குமரி மலர் (1944)— பக். 134, 137.

5. பசுபதிநாத் (நேபாலயாத்திரை) — தருமை ஆதின வெளியீடு (1958) பக். 83.

6. ஷை ஷை — பக், 123.

7. இப்படி அருந்தமிழ்ச் சொற்கள் பல பிற திராவிட மொழி களில் வழங்கும் திறன் தனியாராய்ச்சிக்குரியது.

8-9. பசுபதிநாத் (நேபாலயாத்திரை) — பக். 123-25, 232.

10. T. Burrow — Dravidian Studies, VII — Bulletiu of the School of Oriental Studies — Vol-XII-p. 368.

11. Census of India — 1961 — Vol - IX - (Madras), Part II c, pp. 354-5.

12-14. Introduction to 'A Comparative and Etymological Dictionary of the Nepali Language' by R. L. Turner.

15. Jules Block: 'Some problems of Indo-Aryan Philology', Bulletin of the School of Oriental Studies, Vol. V, pp. 736-743.

16. T. Burrow: 'Dravidian Studies VII' -Ibid-Vol-XII-p. 36.5.

17. T. Burrow and M. B. Emeneau — A Dravidian Etymological Dictionary, p. 572.

# 3

## பாரதியாரின் பழந்தமிழ்

*1*

கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் இக்காலத் தமிழ்க் கவிஞர். அவர் புதுவைக் கவிஞர்; புதுமைக் கவிஞர்; புரட்சிக் கவிஞருங்கூட. பட்டிக்காட்டானும் 'பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!' என்று பாராட்டும்படி* இன்பத் தமிழ்ப் பாடல்களை எல்லோர்க்கும் விளங்கும் எளிய நடையில் இயற்றிய பெருமை பாரதியாருக்கு உண்டு. அவரே எட்டையபுரம் அரசருக்கு எழுதிய ஓலைத்தூக்கு ஒன்றில் தமது கவிதையைப் பிறநாட்டார் போற்றும் பான்மையைம் புலப்படுத்தியுள்ளார்./ அது வருமாறு :

"..............................................

சுவைபுதிது, பொருள்புதிது, வளம்புதிது
　　சொற்புதிது சோதி மிக்க
நவகவிதை, எந்நாளும் அழியாத
　　மகாகவிதை." என்று நன்கு
பிரான்ஸென்னும் சிறந்தபுகழ் நாட்டிலுயர்
　　புலவோரும் பிறரு மாங்கே
விராவுபுக ழாங்கிலத்தில் கவியரசர்
　　தாமுமிக வியந்து கூறிப்
பராவியென்றன் தமிழ்க்கவியை மொழிபெயர்த்துப்
　　போற்றுகின்றார்..........."

இவ்வடிகளிலிருந்து பாரதியார் எத்தகைய புதுமைக் கவிஞர் — எத்தகைய புதுமைக் கவிஞராய் விளங்க அவரே

---

* கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை—மலரும் மாலையும் (1964) —பக்கம்—26

/ பாரதி நூல்கள்—கவிதை (சென்னை அரசு வெளியீடு)— பக்கம்—304

விரும்பினார் — என்பது வெளிப்படும். தம் பாடல்களில் சுவை, பொருள், வளம் மட்டுமன்றி, சொல்லும் புதிதே என்று பிற நாட்டார் போற்றுகின்றனர் என்று அவர் பேசு கிறார். 'அப்படியானால், அவர் பாடல்களில் பழஞ் சொற்களே இல்லையா?' என்ற வினாவிற்கு விடையே இவ்வாராய்ச்சிக் கட்டுரை. இலைமறைகாய் போல அவர் பாடல்களில் எத்தனை எத்தனை இலக்கியச் சொற்கள் — பழந்தமிழ்ச் சொற்கள் — கல்வியறிவும் கேள்வி அறிவும் கடுகளவும் இல்லாத தமிழ்மகன் ஒருவன் எள்ளளவும் உண்மைப்பொருள் விளங்கிக்கொள்ள இயலாத அருந் தமிழ்ச் சொற்கள்—அடங்கியுள்ளன என்பதை எடுத்துக் காட்டுவதே இக்கட்டுரையின் குறிக்கோள்.

பழந்தமிழ்ப் பாடல்களில் உள்ள பழகுதமிழ்ச் சொற் களையும், பழகுதமிழ்ப் பாடல்களில் உள்ள பழந்தமிழ்ச் சொற்களையும் ஆராயும் ஆராய்ச்சி தரும் இன்பமும் பயனும் தனிச்சிறப்பு வாய்ந்தவை என்பதை அறிஞர் அறிவர். அவ்வகையில் பாரதியார் பாடல்களில் எடுத்துக் காட்டாய்ப் பார்க்கலாகும் 575 பழஞ்சொற்களின் — சொற் றொடர்களின்—அகரவரிசை வருமாறு.*

## 2

அகழ்ந்து 40
அகற்றினார் 245
அஞ்சல் 48
அஞ்சிலாய் 27
அஞ்சுகிலேன் 238
அடல் 580
அடவி 483
அண்ணல் 523
அணிகள் 48
அந்தணர் 447
அம்புவி 453
அரி = சிங்கம் 21
அரிய 12
அருந்திறல் 31, 55
அல்லை 540
அலந்தோம் 15
அவனி 330
அவிர் 274
அவிரும் 274
அளவளாய் 564
அளி = வண்டு 147, 483
அளித்தனர் 459
அறம் 492
அறிவை 298
அறைய = சொல்ல 341
அன்றி 492
அன்ன 51, 310
அனை 11

ஆக்கை 555
ஆங்கண் 270, 301
ஆடவன் 579

---

* சொற்களை அடுத்து உள்ள எண்கள் சென்னை அரசின் பாரதி நூல்கள்—கவிதை நூலில் உள்ள பக்கங்களைக் குறிக்கும்.

## 3

எத்தனையோ மொழிகளைப்போலன்றி இன்பத் தமிழ் மொழி பழந்தமிழ் இலக்கியச் செல்வாக்கு நிறைந்தது. ஒரு சிறிது கல்வியறிவு கேள்வியறிவு பெற்றவரும் ஏட்டுத் தமிழை வீட்டுத்தமிழ்—நாட்டுத் தமிழ்—ஆக்க விழைவது

இயல்பு. இவ்வுண்மைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டே மக்கட்புலவர் மகாகவி பாரதியார் பாடல்களில் காணப்படும் மேற்கண்ட பழஞ்சொற்கள் — சொற்றொடர்கள். பாரதியார் பாடல்கள் இன்பத் தமிழிலக்கிய வரிசையில் ஏறுபோலத் தலைநிமிர்ந்து நிற்கத் தகுதி தருவன அச்சொற்கள்—சொற்றொடர்கள். அருந்தமிழ் வல்லாரும் அல்லாரும் 'பாரதியார் பயன்படுத்திய சொற்களா இவை!' என ஐயுறவும் வியப்புறவும் இன்புறவும் செய்யுள் அவற்றுள் பல சங்கச் சொற்கள் என்பதும் இன்னும் பல இடைக்கால இலக்கியச் சொற்கள் என்பதும் கருதத்தக்கன. இது பற்றிய மேலும் விரிவான தனி ஆராய்ச்சி வரவேற்கத்தக்கது.

# 4

## இருபெரும் பேராசிரியர்கள்
## டாக்டர் ரா. பி. சே. - டாக்டர் மு. வ.

பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் காலம் 1896 முதல் 1961 வரை. பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்கள் காலம் 1912 முதல் 1974 வரை. முன்னவர் 65 ஆண்டுகளும் பின்னவர் 62 ஆண்டுகளும் வாழ்ந்துள்ளார்கள். முன்னவர்க்குப் பின்னவர் பதினாறு (16) ஆண்டு இளையவர். (இனி, இக்கட்டுரையில் பெரிதும் இரு பேராசிரியர்களின் முதல் எழுத்துகள் மட்டுமே குறிப் பிடப்பெறும்; இடச்சுருக்கம் கருதியும் திருப்புரைகளைத் (Repitition) தவிர்த்தல் கருதியும்).

மேற்கண்ட தலைப்பு ரா. பி. சே., மு. வ. இருவரையும் தனித்தனியாகவும் ஒப்பு நோக்கியும் நினைத்துப் பார்க்க இடந்தருகிறது. இவ்விரு நோக்குகளையும் நிறைவு செய்ய இக்கட்டுரை இயன்றவரை முயலும்.

சேதுப்பிள்ளை தமிழகத்தின் தென்கோடி மாவட்ட-மாகிய திருநெல்வேலியில் பிறந்தவர்; பேராசிரியர் மு. வ. தமிழகத்தின் வடகோடி மாவட்டமாகிய வட ஆற்காடு மாவட்டத்தில் பிறந்தவர். இவ்விருவர் பேச்சிலுமே அவரவர் மாவட்ட மொழிநடை இருந்தது. இவ்வுண்மையை அவர் களோடு நேரில் பழகியவர் நன்கறிவர்.

திருநெல்வேலியில் பிறந்த ரா. பி. சே. தமிழ்கூறு நல் லுலகம் முழுதும் புகழ்பெற்றிருந்தார்; தமிழகம் முழுவதை யும் அறிவாட்சி செய்த சென்னைப் பல்கலைக் கழகத்தின் தனிப்பெருந்தமிழ்ப் பேராசிரியராயும் இலங்கினார்.

தமிழகத்தின் வடகோடியில் பிறந்த மு. வ.வும் மேற்கண்ட புகழ் மேவியிருந்தார். ஆயினும், தமிழாசிரியராகவே முப்பத்தைந்தாண்டு காலம் பணியாற்றி மாமதுரையில் நிறுவப்பட்ட பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராய் ஆனவகையில் ரா. பி. சேயினும் சிறப்பும் சிந்தனைச் செல் வாக்கும் பெற்றவர் எனலாம்.

ரா. பி. சே., மு. வ. இருவருக்கும் பொதுவான-போற்றத் தக்க-ஒரு பேரியல்பு உண்டு. அது காலத்துக்கு ஏற்ற கல்விக்கடமை-தமிழ்க் கடமையைச் செய்தமையே; இவ் வுண்மையோடு ஒத்த ஒன்று இரு பேராசிரியர்களும் விடுதலை பெற்ற இந்தியாவில் உரிமை பெற்ற தமிழகம் அமைப்பதில் தமிழரசுக் கழகத்தோடு தயக்கமின்றி ஒத்துழைத்தமையே ஆகும். தமிழரசுக் கழகத்தின் 1. தமிழக எல்லைகள் மீட்பு, 2. தமிழகத்தின் தலைநகரம் சென்னையாகவே அமைதல், 3. தமிழைத் தமிழக ஆட்சி மொழியாக்கல் ஆகிய மூன்றிலும் 1945 முதல் 1961 வரை இரு பேராசிரியர்களும் முழுமையாக ஒத்துழைத்தனர். திராவிட இயக்க எதிர்ப்பில் மட்டும் பேராசிரியர் மு. வ. வுக்குச் சற்று தயக்கம் இருந்தது; தமிழரசுக் கழகத்தோடு சற்றுக் கருத்து வேறுபாடு இருந்தது. ரா. பி. சே.யினும் மு. வ. எழுத்துகளிலேயே வடவர் எதிர்ப்புக் கருத்துகள் உள்ளன. இது பற்றி ஒரு நீதி மன்ற வழக்கும் நடந்தது; ஆனால் இக்கருத்து வேறுபாடு காலப்போக்கில் ம. பொ. சி., மு. வ. இருவரிடமும் கரைந்துவிட்டது. இது குறித்து ம. பொ. சி. யின் எனது போராட்டம் பக்கங்கள் 553-554 பார்க்கத்தக்கது.[1]

ஒரு வகையில் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. யை இலக்கிய உலகிற்கு உரியவராக உருவாக்கியவை திரு.வி.க. வின் எழுத்தும் பேச்சும் எனில் அடுத்த நிலையில் பேராசிரியர் ரா. பி. சே. யின் இலக்கியக் கட்டுரைகள் எழுத்தும் பேச்சும் எனலாம். அதற்கு ஒப்பாக, திரு. வி. க. வுக்கு அடுத்த நிலையில் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. யின் எழுத்தும் பேச்சும் டாக்டர் மு. வ. வைப் பெரிதும் தமிழர் வாழ்வியல் சிந்தனைகளில் ஊற்றமுறச் செய்தன எனலாம். மு. வ, வின் 'கண்ணகி'யும் 'மாதவி'யும் 'இளங்கோ'வும் தமிழர் வாழ்வியல் ஒட்டிய பல புதினங்களும், கட்டுரை

களும் கடிதங்களும் சிலம்புச்செல்வரின் சிந்தனைச் செல் வாக்குச் சான்றுகள் எனலாம்.[2]

ஈண்டு பேரறிஞர் அண்ணாவுக்கும் ரா. பி. சே.வுக்கும் இருந்த இணக்கத்தினும் அண்ணாவுக்கும் மு. வ. வுக்கும் இருந்த இணக்கம் அதிகம் என்பதும் குறிப்பிடத்தக்கது. இது பற்றிய பல செய்திகளை எழுதி வைக்காமல் பேராசிரியர் மா. கி. தசரதன் மறைந்தது பேரிழப்பாகும்.

பேராசிரியர்கள் ரா. பி. சே., மு. வ. இருவரிடமும் அவர்கள் காலத்துத் தேசிய இயக்கமும் நீதிக்கட்சி — திராவிட இயக்கங்களும் பெருந்தாக்கம் செலுத்தின எனக் குறித்தல் தவறாகாது.

திருமுறை பேராசிரியர் ரா. பி. சே. இராசாசிக்கு (1940 களில் கூட இராசாசி கூட்டங்களில் 'தலைவர் அவர்களே!' என்றழைக்காமல் 'அக்கிரா சனாதிபதி அவர்களே!' என்று விளித்துப் பேசியதை நானே கேட்டுள்ளேன்). மறுப்புத் தெரிவிக்கும் வகையில் 'மிகையாகாது' என்ற செந்தமிழ்ச் சொல்லைப் பன்முறை பயன்படுத்தியது நினைவுக்கு வருகிறது. அவ்வாறே இராசாசி ஒருமுறை (திரு மீ. ப. சோமு அவர்கள் சாகித்திய அகாதமி விருது பெற்றதற்கு நடைபெற்ற பாராட்டு விழாவில் பேசும்போது) மு. வ. வின் பேச்சைக் கேட்டுவிட்டுப் 'பாதிரியார் பேசுவது போல இருக் கிறது!' என்று குறிப்பிட்டதாக திரு சோமு வாயிலாகவே கேள்விப்பட்டது நினைவுக்கு வருகிறது (டாக்டர் மு. வ. திருப்பத்தூர் கிறித்துவக் குல ஆசிரமத்தில் உருவாகியவர் என்பது நினைவு கொள்ளத்தக்கது).

ரா. பி. சே. யை விட மு. வ. வின் எழுத்துகளில்—சிறப் பாகப் புதினங்களிலும் கட்டுரைகளிலும் கடிதங்களிலும் — சமன்மை, பொதுவுடைமைத் (Socialism/Communism) தாக்கம் இருத்தல் கவனிக்கத்தக்கது. இதுவும் காலத்திற் கேற்ப இரு பேராசிரியர்களின் கருத்துகளும் கனிவு பெற்றன என்பதற்குரிய சான்றாகக் கொள்ளலாம்.

இக்கருத்தோடு இயைபுடைய இன்னொரு கருத்து: ரா. பி. சே., மு. வ. இருவரும் திரு. வி. க.விடம் பெருமதிப்பு கொண்டவர்கள். இதன் விளைவே ரா. பி. சே. தமது தலை சிறந்த 'ஊரும் பேரும்' என்ற தமிழ் வளர்ச்சிக்கழகப் பரிசு

பெற்ற ஆய்வு நூலுக்குத் திரு. வி. க. விடம் முகவுரை (1946) பெற்றதும் டாக்டர் மு. வ. தம் நூல்களுள் தலைசிறந்த 'திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்ற தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்ற நூலுக்கு மட்டும் திரு. வி. க. விடம் அணிந்துரை (1948) பெற்றதும், (டாக்டர் மு. வ.வின் தமிழிலக்கிய வரலாற்றுக்குப் பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அணிந்துரை தந்தமைக்குச் சாகித்திய அகாதமி காரணம் ஆகலாம். ஏனெனில் அந்நூல் டாக்டர் மு. வ.வின் தனி வெளியீடு இல்லை. எனினும் பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ., டாக்டர் மு. வ. வின் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கு அணிந்துரை தந்தது பெருமைக்குப் பெருமை செய்ததாகும்).

இனி, இவ்விடத்தில் தமிழ்ச் சான்றோர் திரு. வி. க. தமது 'வாழ்க்கைக் குறிப்பு'களில் ரா. பி. சே., மு. வ. இருவர் பற்றியும் குறித்திருக்கும் பகுதிகள் ஆழ்ந்து கருதத்தக்கன.[3] இருபெரும் பேராசிரியர்களிடம் இலக்கிய ஒற்றுமை வேற்றுமைகளைத் திரு. வி. க. வின் பார்வையும் பதிவும் தெளிவுப்படுத்தும்.

**சேதுப்பிள்ளை**

> கம்பர் தமிழை வளர்ப்பதற்கென்று தமிழ் நாட்டில் அவ்வப்போது சிலர் பிறப்பதுண்டு. அவருள் சேதுப் பிள்ளை ஒருவர். இவ்வுலகம் கம்பர் கழகமானால் உள்ள நிறைவு கொள்வோருள் சேதுப்பிள்ளை முதல் வராக இருப்பார். எவ்விடத்திலும் எம்மேடையிலும் எப்பேச்சிலும் அவர் கம்பரை மறப்பதில்லை. அவர் நா கம்பரின் உறையுளாகியது.
>
> சேதுப்பிள்ளையின் பேச்சிலும் எழுத்திலும் எதுகை மோனைகள் அணி செய்யும். அவ்வணி அவர்க்கு இயற்கையாயிற்று. என் தலைமையில் சேதுப்பிள்ளை பலமுறை சொற்பொழிவாற்றியுள்ளார். அப்பொழிவு பொழிலாகும்; பொழில் மென்காற்றை வீசும். சேதுப் பிள்ளை இளமையில் என்னுடன் நெருங்கியதில்லை. காரணம் அந்நாளில் யான் புகுந்த அரசியல் உலகம் அவர்க்குப் பிடியாமை என்று சொல்லப்பட்டது.

மேற்கண்ட திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புகள் பகுதியிலும்

ரா. பி. சே. பற்றித் திரு. வி. க. வின் இரத்தினச் சுருக்கமான சொல்லோவியம் ஒன்று உள்ளது. அதுவருமாறு :

> தமிழ் கொழிக்கும் பொருநைக் கரையில் பிறந்து, தமிழ் பொங்கும் பொதிகைத் தென்றலில் வளர்ந்து, தமிழார்ந்த மனமொழி மெய்களைப்பெற்றுத் தமிழ் வண்ணமாய்த் தமிழ் பொழியும் ஒரு பெருங் கொண்டலிடை உதித்த மின்னொளி இந்நூல்.

**வரதராசனார்**

வாலாஜா, இராணிப்பேட்டை, வேலூர், வெட்டுவானம் முதலிய இடங்கட்கு யான் அடிக்கடி செல்வேன். கூட்டங்களில் யான் மு. வரதராஜனாரைப் பார்ப்பேன். அவர் என்னைக் கண்டதும் ஒதுங்கி ஒதுங்கி நிற்பார். பின்னே நாங்கள் நெருங்கிப் பழகினோம். வரதராஜனார் முக அமைப்பு என் மூளைக்கு வேலை அளித்தது. அதைச் சிந்திக்கச் சிந்திக்க என் மூளை அவர் மூளையை நண்ணியது. நுண்ணறிவுக்கேற்ற முகம் வடிந்திருக்கிறது என்ற முடிவுக்கு வந்தேன்.

முதல் முதல் வரதராஜனார் பேச்சை யான் வெட்டுவானத்தில் கேட்டேன்; அப்பேச்சு அவர் முக அமைப்பைப் பற்றி யான் கொண்ட முடிவை உறுதிப் படுத்தியது. அவரது எழுத்தும் பேச்சைப் போலவே இருத்தல் கண்டேன்.

வரதராஜனார் பேச்சிலும் எழுத்திலும் பர்னாட் ஷாவின் கருத்துக்கள் ஆங்காங்கே பொலியும். அவர் பர்னாட்ஷா நூல்களைப் படித்துப்படித்து ஒரு தமிழ் 'பர்னாட்ஷா' ஆனரர் என்று கூறுதல் மிகையாகாது. பர்னாட்ஷாவைப் பார்க்கிலும் வரதராஜனார் ஒரு துறையில் சிறந்து விளங்குகிறார் என்பது எனது ஊகம். பர்னார்ட்ஷா பலப்பல நூல்களை எழுதி எழுதி முதுமை எய்தியவர். இம்முதுமையில் அவர்க்கு வழங்கும் இக்கால அரக்கப் போர்க்கட்சி 'வாழ்க்கைக் குக் கிறிஸ்து வேண்டும்; பைபிள் வேண்டும்' என்னும் எண்ணத்தை அவரிடம் அரும்பச்செய்து வருகிறது. வரதராஜனார்க்கோ அக்கருத்து இளமையிலேயே முகிழ்த்தது. 'வாழ்க்கைக்குச் சமயம் தேவை; கடவுள்

தேவை' என்று இளமையிலேயே வரதராஜனார் பேசினார்; எழுதினார். கீழ்நாட்டு இளமை மேல்நாட்டு முதுமையை விஞ்சி நிற்கிறது.

கூட்டம் கூடுதற்கு முன்னர்க் காலையிலும், கூட்டம் முடிந்த பின்னர் மாலையிலும் வரதராஜனாரும் யானும் ஆற்றங்கரைக்குச் செல்வோம்; தோட்டங்கட்குப் போவோம்; இயற்கையை எண்ணுவோம்; பேசுவோம்; உண்போம். அவர் திருப்பத்தூரில் வந்திருந்தபோது இயற்கையோடியைந்த வாழ்வு அவரிடம் தானே தவழ்ந்தது. நண்பரது சென்னை வாழ்க்கை இயற்கையிலே செயற்கையைச் சேர்ந்தது. அடிக்கடி நண்பரைச் சென்னையில் காண்பதில் எனக்கு இன்பம் உண்டாகிறது; அதே நேரத்தில் செயற்கையின் சேர்க்கை நினைவு தோன்றும்போது துன்பம் உண்டாகிறது. அன்பரும் சிற்சில போது வருந்துவது எனக்குத் தெரியும்.

வரதராஜனார் தமிழறிஞரா? சீர்திருத்தக்காரரா? அவர் தமிழறிஞர் என்பது வெள்ளிடைமலை. சீர்திருத்தக்காரர் என்பது வெள்ளிட்ட விளக்கு. அவரது சீர்திருத்தப் பேச்சுகளை யான் பலமுறை செவிமடுத்துள்ளேன். அவர் வாழ்க்கைச் சீர்திருத்தக்காரர், சமூகச் சீர்திருத்தக்காரர் என்பதில் ஐயமில்லை. அவரை எனது சீர்திருத்த உலகில் என் உள்ளம் சேர்த்தே இருக்கிறது.

வரதராஜனார் என் வீட்டுக்கு வருவார்; எனக்கினிய கனிகளைக் கொணர்வார். அவர் என்னிடம் பேசிக்கொண்டே எனது அன்றாட வாழ்க்கையை ஆய்ந்துள்ளார். அஃது எனது மணிவிழாவை முன்னிட்டு 'வள்ளுவர் குறட்பா' வெளியிட்ட மலரில் வரதராஜனார் வரைந்துள்ள ஒரு கட்டுரையால் தெரிகிறது.

அறிஞர் இப்பொழுது பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக வீற்றிருக்கிறார். அவர் பத்திரிகையுலகிலும் ஓர் ஆசிரியராதல் வேண்டும் என்பது எனது வேணவா. 'ஆண்டவன் அருள் செய்வானாக' வரதராஜனாரிடம் தமிழ் பயிலும் மாணாக்கர் சிலர்

> என்னிடம் வருவர். அவரும் குறிக்கத்தக்கவர் வேங்கடசாமி, இரகுநாயகன், குருசாமி முதலியோர் (மற்றவர்கள் பெயர் தெரியவில்லை). இவர்கள் தொண்டால் வருங்காலத் தமிழ்நாடு நன்கு அமையும் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டாயிருக்கிறது[4].

இந்தக் கட்டுரையில் இந்த இடத்தில் திரு. வி. க. போற்றும் திரு. வி. க. வாக இன்று நம்மிடையில் உள்ள சிலம்புச்செல்வர் ம. பொ. சி. அவர்கள் தமது தன் வரலாறாகிய 'எனது போராட்டம்' என்ற நூலின் முதற் பதிப்பில் (1974) பக்கங்கள் 545-546இல் உள்ள ஒரு குறிப்பை—இக் கட்டுரையாளனைப் புல்லரிக்கச் செய்யும் ஒரு குறிப்பை—நினைவூட்டிக் கொள்ளல் பொருத்தம்.

*சிலப்பதிகார மாநாடு*

> *1951 மார்ச் 24ஆம் நாளில் இராயப்பேட்டை காங்கிரஸ் திடலிலே, திராவிட இயக்க எதிர்ப்பு மாநாட்டின் தொடக்க நிகழ்ச்சியாகச் சிலப்பதிகார மாநாடு நடந்தது. மாநாட்டுப் பந்தலுக்குக் 'கண்ணகிப் பந்தல்' என்று பெயர் வைக்கப்பட்டது. தமிழ் மொழியின் வரலாற்றி லேயே சிலப்பதிகாரத்தின் பெயரால் கூட்டப்பட்ட முதல் மாநாடு இதுதான். காங்கிரஸ் பாரம்பர்யத்தைச் சார்ந்த தமிழரசுக் கழகத்தார் நடத்திய முதல் இலக்கிய மாநாடும் இதுதான். பண்டிதர்களின் பெட்டிகளிலே மறைந்து கிடந்த சிலப்பதிகாரக் காப்பியத்தை இந்த நாளிலேதான் சாதாரணப் பொதுமக்கள் மத்தியிலே கொண்டு வந்த பெருமையை நான் அடைந்தேன். காங்கிரஸ்காரரும் என் அரிய நண்பருமான வடபாதி மங்கலம் திரு. வி. எஸ். தியாகராஜ முதலியார் வரவேற்புக் குழுத் தலைவராக இருந்து இம் மாநாட்டைத் தமிழுக்குப் புகழ் தேடித்தரும் வகையில் சிறப்பாக நடத்தி வைத்தார்.*

தேசிய இயக்கங்களும் இலக்கியப் பண்பாட்டு இலக்கியங் களும் இந்நாள் வரை பெரிதும் தொழில் முதலாளிகள், பண்ணை முதலாளிகள் துணையோடேயே நடத்தப்படல் கருதத்தக்கது. இது பற்றி ம. பொ. சி. அவர்களே 'எனது போராட்டம்' என்ற நூலில் பக்கம் 554இல் தமது உள்

ளார்ந்த சமன்மைக் கொள்கை வெளிப்படும் வகையில் வரைந்துள்ள அரிய பெரிய குறிப்பு வருமாறு :

> தேர்தல் நெருங்கி வந்ததன் காரணமாகக் காங்கிரசில் இருந்த நிலப் பிரபுக்களும், தொழில் அதிபர்களும் சுய நலம் காரணமாகத் திராவிட எதிர்ப்பு இயக்கத்தை ஊக்குவிப்பதில் அக்கறை காட்டலாயினர், ஆனால் தமிழரசு இயக்கக் கொள்கையில் பற்றில்லாதவர் களைக் கொண்டு எதிர்ப்பியக்கம் தொடர்வதை நான் விரும்பவில்லை.

(வடபாதி மங்கலம் பின்னால் (ள்) பேரறிஞர் அண்ணா முதல்வரானபோது நடத்திய உலகத்தமிழ் மாநாட்டின் பொருளாளராகவும் திகழ்ந்தார் என்பது குறிப்பிடத்தக்கது).

> சென்னைப்பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை மாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசினார். அவரது தொடக்க உரை சிலப்பதிகாரத்தை ஒட்டியதாக மட்டு மல்லாமல், நான் நடத்திவரும் புதிய தமிழகம் படைக் கும் இயக்கத்திற்கே ஆக்கமும் ஊக்கமும் தருவதாக அமைந்தது.
>
> அப்போது காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளராக இருந்த திரு ந. சஞ்சீவியவர்கள் சிலப்பதிகார மாநாட்டின் தொடக்க நிகழ்ச்சியாக வில், புலி, மீன் சின்னங்கள் பொறித்த தமிழரசுக் கொடியை உயர்த்தி வைத்துப் பேசினார். ஓர் இளம் புலவரைக் கொண்டு தமிழ் இலக்கிய இயக்கத்தைத் தொடங்கி வைக்க வேண்டுமென்ற கருத்துடனேயே நான் என்-பால் பேரன்பு கொண்ட ந. சஞ்சீவியவர்களைக் கொண்டு தமிழரசுக் கொடியை உயர்த்தி வைக்கச் செய்தேன். அந்தக்கொடி இன்றளவும் இலக்கிய வானில் பறந்து கொண்டிருப்பதனை என் அகக் கண்களால் காண்கிறேன்.
>
> சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த டாக்டர் மு. வரதராசனார், இம் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார்.

ரா. பி. சே., மு. வ. இருவரையும் நினைவுகூறும் இக் கட்டுரைக்கு மேற்குறித்த மேற்கோள் எவ்வளவுபொருத்தம்

என்பது தானே விளங்கும். ஆயினும் ஈண்டு அடிக்குறிப்புப் போல் குறிக்கத்தக்கன சில :

1. ம. பொ. சியின் எனது போராட்டம் நூலில் பக்கம் 411 இல்:

> தமிழரசு இயக்கத்துக்குச் சரியான பின்பலமாக அமைந்த மற்றொரு மாநாட்டையும் நன்றியுணர்வோடு இங்கு நான் குறிப்பிட வேண்டும். அது, சென்னை மாகாணத் தமிழாசிரியர் மாநாடாகும்.
>
> 1947 மார்ச் 1, 2 தேதிகளில் சென்னை செயிண்ட் மேரிஸ் மண்டபத்தில் அந்த மாநாடு நடைபெற்றது. பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை மாநாட்டின் தலைவராக இருந்தார். வரவேற்புக் குழுத் தலைவர் மு. வரதராசனாரும், செயலாளர் பேராசிரியர் அன்பு கணபதியும் என்னையும் அண்ணாவையும் அந்த மாநாட்டில் பேச வைக்க வேண்டுமென்று விரும்பினர். மாநாட்டின் 2ஆவது நாள் நடவடிக்கைகளின் இறுதி நிகழ்ச்சியாக எங்கள் பேச்சு அமைக்கப்பட்டது. (தமிழ்ப்புலவர்கள் கண்ட கனவு அரசியல் நனவாக இருபத்திரண்டாண்டுகள் (22) பிடித்தன.)

2. ம. பொ. சி.யின் ‘எனது போராட்டம்’ என்ற நூலின் இரண்டாம் பகுதி (பக். 359) ‘தமிழ் முரசு’ தோற்றம் என்ற தலைப்போடு ஆரம்பமாகிறது. அப்பகுதி வருமாறு:

> தமிழகக் காங்கிரசுக்குள் நடைபெற்ற கோஷ்டி பூசலில் பங்கு கொண்டிருந்தபோதே புதிய தமிழகம் படைக்கும் பிரச்சாரத்திலும் ஈடுபட்டு விட்டேனென்று சொல்ல வேண்டும். 26—6—45ல் திருச்சி மலைக் கோட்டை மண்டபத்தில் இலக்கியக் கூட்டமொன்று நடை பெற்றது. ...அந்தக் கூட்டத்திலே ‘புதிய தமிழகம்’ என்னும் பொருள் பற்றி விரிவாகப் பேசினேன். இலக்கியம் பேசுவதாகத் தொடங்கி எனது கற்பனை யிலிருந்து புதிய தமிழகம் பற்றி விரித்துரைத்தேன்.
>
> நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அந்தக் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

மேற்படி கூட்டம் பற்றிய இரு குறிப்புகள் ஏனோ ம.பொ.சி யால் குறிக்கப்படவில்லை. முதலாவது 26—6—45 அவரது

40ஆம் ஆண்டு பிறந்த நாள் என்பது (அரசியலில் எல்லோரும் புகழ்பெற்ற பின்பே தம் பிறந்த நாளை நினைப்பது). மற்றொன்று உள்ளூர்க்காரன் — ஏன்? — மலைக்கோட்டை மண்டபத்தையே பின் சுவராகக்கொண்ட மனையில் பிறந்தவனாகிய யானே மேற்படி கூட்டம் பற்றி விளம்பரம் செய்யப் பேருதவி புரிந்தேன் என்பது. (ஆனால் திரு ம. பொ. சிக்கு அப்போதுதான் நான் அறிமுகமாகி யிருந்தேன்). இந்நிகழ்ச்சிக்கு இரண்டு மூன்று நாட்கட்கு முன்புதான் பொன்மலையில் மாபெரும் இரயில்வே தொழிலாளர் மாநாடு நடந்தது. அம்மாநாட்டை ஒட்டி நடைபெற்ற கண்காட்சியைத் திறந்து வைக்கவே ம.பொ.சி. வந்திருந்தார். அம்மாநாடு பற்றி அந்நாளில் 'கல்கி'யில் கல்கி எழுதிய கட்டுரையில் மாநாட்டைத் திறந்து வைத்த ம. பொ. சி. 'நானே ஒரு கண்காட்சிப் பொருள்' என்று குறிப்பிட்டதையும் மேற்படி மாநாட்டில் காதுகேளாத கவிஞர்கள் நாமக்கல் கவிஞரும் வள்ளத்தோலும் கலந்து கொண்டது பற்றியும் குறிப்பிட்டிருந்தார். என் வீட்டில் சிறிது காலம் குடியிருந்த திரு சி. வெங்கடசாமி அவர்களோடு நான் இந்த மாநாட்டிற்குச் சென்றபோதே ம. பொ. சி. யையும் கவிஞர்களையும் கண்டேன்.

'எனது போராட்டத்'தில் இன்னுமோர் குறிப்பு-பக்கம் *360:*

மலைக் கோட்டைப் பேச்சுக்குப் பின்னர் 5 மாதம் கழித்து அஃதாவது, 11—11—45 இல் சென்னை மண்ணடிப் பகுதியில் லிங்கி செட்டித் தெருவிலுள்ள ஒரு கட்டடத்தில் 'புதிய தமிழகம்' என்ற தலைப்பிலே தொடர் சொற்பொழிவைத் தொடங்கினேன்...

வாரத்திற்கு வாரம் எனது பேச்சைக் கேட்கும் மக்கள் அதிகரித்து வந்தனர். குறிப்பாகத் தமிழாசிரியர்களும் மாணவர்களுந்தான் மிகுதியாக வந்தனர் என்று கூற வேண்டும். ஆசிரியர்களிலே வித்துவான் மு. வரத ராசனார் (பிற்காலத்தில் டாக்டர் பட்டம் பெற்றார்), பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், வித்துவான் அன்பு கணபதி ஆகியோர் தொடர்ந்து வாரந்தோறும் வந்திருந்து எனது சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்ந்தனர்.

மேற்கண்ட மேற்கோள் டாக்டர் மு. வ. எழுத்துக்களின் பின்புலத்தை ஆய்வோருக்குப் பெருந்துணை புரியும். 'எனது போராட்டம்' (பக். 500) நூலிலிருந்து இன்னும் சில மேற்கோள்கள்:

> டாக்டர் மு. வரதராசனார் அவர்களால் 'தமிழ் முரசு' இதழில் 'அன்னைக்கு' — 'தம்பிக்கு' என்னும் தலைப்புகளில் கழகக் கொள்கைகளை விளக்கும் வகையில் தொடர்ந்து எழுதப்பட்ட கட்டுரைகளைத் தொகுத்தும் நூல்கள் வெளியிடப்பட்டன.
>
> தமிழ்ப் பெரியார் திரு வி. க., டாக்டர் ரா. பி. சேதுப் பிள்ளை, டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் ஆகிய சான்றோர்கள் எனக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து வந்தனர்.

இன்னுமொரு மேற்கோள் :

> 1953 ஜனவரி, 24, 25 தேதிகளில் த. அ. க. இரண்டாவது மாநில மாநாடு கூடியது. முதல் நாளில் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை தலைமையில் இலக்கிய மாநாடு நடைபெற்றது. டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் வரவேற்புக் குழுத்தலைவராக இருந்தார். செட்டிநாட்டரசர் எம். ஏ. முத்தையா செட்டியார் மாநாட்டைத் தொடங்கி வைத்தார்.
>
> இந்த இலக்கிய மாநாட்டிலும் சென்னைப் பிரச்சனை பற்றி அதிகமாகப் பேசப்பட்டது. டாக்டர் ரா.பி. சேதுப் பிள்ளை 'தமிழரசுக் கழகத்தைத்தான் தமிழ்நாடு நம்பியிருக்கிறது. சென்னையைக் காக்க ம. பொ. சி. காலாலிடும் கட்டளையைத் தலையால் நிறைவேற்ற நான் தயார்' என்று முழங்கினார். அவரது குரல் இன்னமும் என் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது (பக். 614).

இக்கட்டுரையில் டாக்டர் ரா. பி. சே., டாக்டர் மு. வ. ஆகிய இரு பெரும் பேராசிரியர்கட்கு உடன்பாட்டு நிலையில் தேசிய, இலக்கிய நிலையில் எதிர்மறையான திராவிடப் பின்னணியோடு முழுதும் உடன்பாடான தமிழரசுக் கழகப் பின்னணியும் மிகுதியாக இருந்ததைக் காட்டவே மேற்கண்ட மேற்கோள்கள். இம்மூன்று

பின்னணிகளையும் ஊடுருவிய பொதுவுடைமைப் பின்னணி பெருமளவில் மு. வ. விடமும் ஒரு சிறிது டாக்டர் ரா. பி. சே. யிடமும் காணலாம் (சான்று: ஓராண்டு தீபாவளி மலரில் வெளிவந்த 'சிவனடியார் ஸ்ட்ரைக்' என்னும் கட்டுரை). இந்த வேறுபாட்டுக்கும் ஒரு காரணம் பேராசிரியர் ரா. பி. சே. யின் மூப்பும் டாக்டர் மு. வ. வின் இளமையும்

இனி, பேராசிரியர்கள் டாக்டர் ரா. பி. சே., டாக்டர் மு. வ. ஆகியோரின் தமிழ்த்தொண்டின் தனிச்சிறப்புகள் பற்றிச் சில கருத்துக்கள்:

1. பேராசிரியர் டாக்டர் ரா. பி. சே. பாளையங் கோட்டை செயின்ட் சேவியர் கல்லூரியில் பயின்றமை யால் ஓரளவு கிறிஸ்துவப் பின்னணி உடையவர்; டாக்டர் மு. வ. திருப்பத்தூர் குருகுல ஆசிரமத் தொடர்பால் ஓரளவு கிறிஸ்துவப் பின்னணி உடையவர். ஆனால் இவ்விருவருள் டாக்டர் ரா. பி. சே. அவர்கள் 'கால்டுவெல் ஐயர் சரிதம்' (1932), 'கிறித்தவத் தமிழ்த் தொண்டர்' (1946) போன்ற முன்னோடி நூல்களை எழுதியமை நினைக்கத்தக்கது. இதற்கும் அவர்தம் காலப் பின்னணி காரணமாகலாம். அடுத்த நிலையில் பேராசிரியர் புரிந்த பெருந்தமிழ்ப்பணி தமிழ் நூற் சுவையை இனிய செந்தமிழ் நடையால் மேடை யிலும் எழுத்திலும் மேம்படுத்தியதன் வாயிலாகத் தமிழ் உணர்ச்சி, அறிவு வெள்ளம் தமிழ் மக்களாகிய கழனி முழுதும் பாய்ந்தது. ஆங்கில மொழியே அருமை பெருமை உடையது என்று கற்றறிந்த தமிழர்களும் கருதிய காலத் தில் மேடைதோறும் ஆங்கிலேயர் உடை அணிந்து அருந்தமிழின் பெருமையை அழகோடும் ஆற்றலோடும் எடுப்போடும் எழிலோடும் அழுத்தம் திருத்தமான ஒலிப் பாலே உயர்த்தியதால் ஆங்கிலத்திற்கு அடிமைப்பட்டிருந் தாரும் நாணித் திருந்தினர்; திருந்தாதாரும் தம் உள்ளத் துக்குள் தமிழை மதிக்கத் தொடங்கினர். பேராசிரியர் டாக்டர் ரா. பி. சே.க்கு முன் 1927 முதல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் சிறந்த முறையில் திருவாளர்கள் கே. என். சிவராசப் பிள்ளை, எஸ். அனவரத விநாயகம் பிள்ளை, எஸ். வையாபுரிப் பிள்ளை போன்றவர்களால் தமிழாய்வு நிகழ்த்தப்பட்டாலும் — குறைகளிருப்பினும் முன் னோடியாக மிக விரிவான அடிப்படையில் தமிழ்ப்

பேரகராதி வெளியிடப்பட்டிருந்தாலும் அவர்தம் பணிக ளெல்லாம் நூற்றுக்கணக்கான அறிஞர்கட்கே பயன் பட்டது அப்பயன்பாட்டை அகலப்படுத்தி — ஆழப் படுத்திப் பல்லாயிரக் கணக்கான மக்கள் 'செஞ்சொற் கவியின்பத்தைச் செவிநுகர்கனி'களாகப் பெறச் செய்த முதல் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ரா. பி. சே. அவர்களே. புலமை மிக்கவர்களாலும் சாதிக்க முடியாத் ஒரு பணியை — தமிழகமெங்கும் தமிழின்பத்தைப் பல்லாயிரவர் நுகரச் செய்யும் பணியைச் செய்து, அதன் காரணமாகவே 'சொல் லின் செல்வர்' என்ற சிறப்புப் பட்டமும் பெற்றவர் டாக்டர் ரா. பி. சே. இறுதியாக, பேராசிரியர் நாற்பதாண்டுகட்கு முன்பே மொழியியல் ஆய்வின் தேவைகளை உணர்ந்து 'Tamil Literary and Colloquial' என்ற நூலையும் 'Words and their significance' என்ற நூலையும் நம் பல்கலைக்கழக வாயிலாகவே வெளிப்படுத்தினார். இந்நூல்களை யான் தமிழ்த்துறைத் தலைவனானதும் மறுபதிப்புச் செய்யும் தொண்டினைப் புரிந்தேன். ஒலி, பொருள் ஆகிய இரு பெருந்துறைகள் பற்றிய இந்த ஆய்வின் பெருமையை டாக்டர் கமில் சுவலெபில் அவர்களும் போற்றியுள்ளார். அன்றாட வாழ்விலேயே இயற்கையோடு இயற்கையாய் வாழ்ந்த நாட்டுப்புற மு. வ. சங்க நூல்களில் தலைமை யிடம் பெற்றுள்ள இலக்கியப் பொருளாகிய இயற்கையைத் தம் பிஎச். டி. ஆய்வுக்கு எடுத்துக்கொண்டது வியப்பிற் குரியது இல்லை; விழுப்பம் வாய்ந்ததே. டாக்டர் மு. வ. தமிழாய்வுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதல் பிஎச். டி. பட்டம் பெற்றவர். அவ்வாறே தம் பெருந்தமிழ் தொண்டுக்காக மறைவதற்கு முன் அமெரிக்க விஸ்கான்சன் பல்கலைக்கழகத்தில் D. Litt. பட்டமும் பெற்ற தனிப் பெருமையும் மு. வ. வுக்கு உண்டு. முதலில் தமிழ்ப் புலவர் பட்டம் பெற்றுப் பின்னர் பிஎச். டி. பட்டம் பெற்று, மதுரைப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் ஆன முதற் பெருமையும் டாக்டர் மு. வ. வுக்கே உண்டு.

ரா. பி. சே. அவர்களுடைய கட்டுரைகளில் என்னைக் கவர்ந்த புதுவகையான கட்டுரைகள் 'கடற்கரையிலே' என்னும் தலைப்புக்கொண்ட நூலில் உள்ளவையே. பேரா சிரியர் ரா. பி. சே. அவர்களுடைய இறுதி நூலாகிய 'ஆற்றங்கரையிலே' அவர் சொல்லச் சொல்ல யான் எழுதி

'கல்கி' வார இதழுக்கு அனுப்பியதாகும். 'ஆற்றங்கரை யினிலே' கட்டுரைகளைச் சொல்லின் செல்வர் சொல்லச் சொல்ல யான் எழுதியபோது அவர் எவ்வாறு இலக்கிய—வரலாற்றுச் சிந்தனைக் கடலில் மூழ்கி மூழ்கிக் கருத்து முத்து களை வாரிக்கொண்டு வருகிறார் என்பதை நேரில் கண்டு இன்புறும் பேறு பெற்றேன். சென்னைப் பல்கலைக் கழகத்தின் மணிக்கூண்டு கட்டடத்தின் வடபால் பகுதியின் முதல் அறையில் உட்கார்ந்து கொண்டு கடற்கரையை நோக்கிய கண்களோடு தம் வாயிலிருந்து வரும் சொல்லை யும் பொருளையும் 'தாப்பு, தாமரைப்பூ' என்று தாயும் தமக்கையரும் சொல்லி மகிழும் வகையில் குழந்தை கை விரல்களை மெல்லச் சுழற்றிச் சுழற்றிக் காட்டுவது போல காட்டிக் காட்டித் திருவாய் மலர்ந்த திறத்தைப் பன்னாளும் சுவைக்க நேர்ந்தமை—அதுவும் அவர் தம் கடைசி ஆண்டில்—யான் பெற்ற பெரும் பேறாகும்.

ஆம். கட்டுரையும் ஒரு கலையே—கவிதை போன்றதே என்பதைத் தம் யாழும் குழலும் இடியும் மின்னலும் போன்ற பேச்சுக் கட்டுரையாலும் எழுத்துக் கட்டுரையாலும் காண் பித்தவர் ரா. பி. சே.

ரா. பி. சே. யின் ஆய்வுத்திறம் புதிய தமிழகத்தின் ஊர்ப்பேர்களெல்லாம் சீர்பெற உதவியது. தி. மு. க. அரசு தோன்றி ஊர்ப் பெயர்கள் சீர்பெற உந்தியது; உதவியது—வாய்ப்பு நேர்ந்த போதெல்லாம் திரு. ரா. பி. சே. ஊர்ப் பெயர்கள் பற்றிப் பேசிய ஆய்வுகளேயாம். எடுத்துக் காட்டாக, தியாகத்தை நினைவூட்ட வேண்டிய தியாகராய நகரை 'தியாகை' என்று தமிழ் மரபுப்படி சுருக்காமல் தி. நகர், தி. நகர் என்று தீ நினைவு வர அழைக்கலாமோ என்பார். இன்னும் இந்தத் தீம்பு நீங்கவில்லை. என்றாலும் 'பார்க்கு பார்க்கு' (Park) என்று நம் இரயில் நிலையம் ஒன்றை அழைக்கிறார்களே! எதைப் பார்க்கு?! ஏன் பூங்கா என்று பூரிப்புடன் சொல்லலாமே என்று மேடைதோறும் அவர் முழங்கிய முழக்கம் வீண்போக வில்லை! 'மாயவரம்' கேட்கிறார்களே! மயிலாடுதுறை என்று வாய் மணக்க அழைக்கலாகாதா? என்ற பேராசிரியர் வினாவுக்கு விடை கிடைக்காமல் போகவில்லை! இதை எல்லாம் எண்ணும் போது இன்று நம்முடன் வாழும் தொண்ணூறு வயது தொண்டுக் கிழவர் (இரு பொருளிலும்) சுத்தானந்த

பாரதியார்--தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் முதல் இராசராச சோழன் பரிசாகிய ஒரு நூறாயிரம் பெற்றவர், 'செந்தமிழுக்குச் சேதுப் பிள்ளை' என்று போற்றியது பெரும் பொருத்தமே என்பது புலனாகும்.

பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்கள் செய்த தனிப் பெருந்தொண்டு படைப்பிலக்கியங்களைப் படைத்தமையே. அதிலும் சிறப்பாகக் குறிக்கத் தக்கது தமிழ்ச் சமூக வாழ்வையே தலைமையாகக் கருதி அவர் படைத்த புதினங்களே. தமிழ் முரசில் வந்த 'அந்தநாள்' தவிர, ஏனையன எந்த வார, மாத இதழ் (விளம்பரத்) துணையுமின்றி அவர் படைத்த புதினங்கள். 1945, 1960 ஆகிய பதினைந்து ஆண்டுகளில் தமிழ்நாட்டு இளைஞர் உலகில் தனிப்பெரும் தாக்கத்தை ஏற்படுத்தின. புதினங்களால் மு. வ. பெற்ற புகழை நோக்க அவர் தம் இலக்கியக்கட்டுரைகள், இலக்கிய ஆய்வுகள், மொழி நூல், மொழியியல் கட்டுரைகளால் எல்லாம் பெற்ற செல்வாக்குச் சிறிதே. மழலையர் முதல் முதியவர் வரைக்கும் பல நூல்கள் எழுதியிருப்பினும் மு. வ. வின் புகழுக்கும் செல்வாக்குக்கும் காரணம் அவர் தம் கதைகளிலும், கடிதங்களிலும் காணப்பட்ட சிந்தனைச் சிறப்பே ஆகும். நடை வகையில் எடுத்துக்கொண்டாலும் திரு. வி. க., சேதுப்பிள்ளை போன்றோரின் செந்தமிழ் நடை இல்லை மு. வ. வின் நடை. ரா. பி. சே. யின் நடை அணி நடை என்றால் மு. வ. வின் நடையை அறிவுநடை - அற நடை எனலாம். முன்னவர் நடையை வண்ண நடை என்றால், பின்னவர் நடையை அன்ன நடை எனலாம். வேறு-வீறு வகையில் சொன்னால், மு. வ. வின் எளிய இனிய நடை எஃகின் மென்மையையும் வன்மையையும் ஒருங்கே படைத்ததாகும். இதற்குக் காரணம் அவர் பெரிதும் மதித்துப் போற்றிய காந்தியத்தின் 'எளிமையே வலிமை' என்ற எண்ணம்தான் எனலாம்.

ரா. பி. சே. யின் நூல்களைவிட நான்கு மடங்கு அதிக நூல்களை டாக்டர் மு. வ. படைத்ததற்கான பெருங்காரணம் மேடைப் பேச்சுகளில் எவ்வளவு குறைத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு குறைத்துக்கொண்டு எழுத்துப் பணியில் ஈடுபட்டமையே ஆகும். கலை உணர்வோடு சேதுப் பிள்ளையினும் அழகாகவும் பேசவல்ல டாக்டர் மு. வ. தம் பேச்சுத் திறமையைத் திட்டமிட்டு அடக்கி ஒடுக்கிக்

கொண்டமையால் அவர் தம் நுண்ணறிவு நூல்கள் பலவாய் வெளியிடப்பட்டன. இதனால் தமக்குப் பெரும் பொருளும் புகழும் சேர்த்துக் கொண்டதோடு தமிழர்க்கு அறிவும் ஆற்றலும் அழியாப் புகழும் ஏற்படப் பெரிதும் ஒரு தமிழாசிரியராக இருந்த அவர், தம் காலத்தில், தம்மால் இயன்ற பணிகளைப் புரிந்த நிறைவு அவருக்கும் நமக்கும் ஏற்புடையதாய் உள்ளது.

ரா. பி. சே., மு. வ. இருவருக்கும் இருந்த ஓர் ஒற்றுமை தம் கைப்பட மணி மணியான எழுத்துக்களால் நண்பர் கட்குக் கடிதம் எழுதியமை. இதில் மு. வ. வின் கடிதங்கள் பலர் வாழ்வு, சிக்கலுக்குத் தீர்வு காட்டுபவை. ரா. பி. சே. யின் கடிதங்கள் நட்பும் நற்றமிழும் போற்றுபவை.

ஒரு பெரும் வேறுபாடு; மு. வ. நண்பர்களிடமும் பெரி தும் பேச்சைச் சுருக்கி எழுத்தை வளர்த்தவர் ரா. பி. சே உரையாடலையே — உரையாற்றலையே கலையாக வளர்த்தவர்.

ரா. பி. சே., மு. வ. இருவரும் சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதலிரு தமிழ்ப் பேராசிரியர்கள்.' தமிழை வேறு வேறு வகைகளில் பலர் தமிழாகச் செய்த இரு கண்மணிகள்.

## குறிப்புகள்

1. ம. பொ. சிவஞானம், எனது போராட்டம், இன்ப நிலையம் சென்னை, முதற்பதிப்பு, 1974.

2. சிலம்புச் செல்வர் பற்றி மு. வ.

திரு. கிராமணியாரின் பேச்சிலும் எழுத்திலும் எவரைப் பற்றிப் பேசினாலும் குணம், குற்றம் இரண்டையும் சீர்தூக்கிப்பார்க்கும் பண்பு இருப்பது தனிப்பெரும் சிறப்பாகும். தம் கட்சியைச் சார்ந் தோருடைய குற்றங்களைக் குணமாகக் காணுவதும், எதிர்க்கட்சி யினைச் சேர்ந்தவர் என்ற காரணத்தால் அவருடைய குணங்களை யும் குற்றமாகக் காணுவதுமாகிய அரசியல் மூடநம்பிக்கை திரு. ம. பொ. சியிடம் இருக்கக் கண்டதில்லை.

பேச்சிலும் எழுத்திலுமே அன்றித் திரு. கிராமணியாரின் எண்ணத்திலேயே ஒரு தனிப்போக்கு உண்டு. எண்ணத்தில் உள்ள புது வகைத் தெளிவும் எழுச்சியுமே அவருடைய 'முரசி'லும் மேடை யிலும் ஒலிக்கின்றன. உள்ளத்தில் உண்மைஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்.

பழந்தமிழ் இலக்கியத்திலிருந்து எடுத்துக் காட்டுக்கள் கிளம்பும்; அவை பாமரரும் தெரிந்து கொள்ளக் கூடிய வகையில் வடிவுபெறும்.

பழங்காலப் புலவர் பெருமக்களின் உள்ளக் கருத்துக்கள் ஆராயப்படும். அவை பாட்டாளி மக்களின் முன்னேற்றத்திற்கு உதவும் வகையில் எடுத்துரைக்கப்படும். காந்தியம் போற்றப்படும்; கார்ல்மார்க்ஸ் தத்துவமும் ஆராயப்படும்.

கருத்துக்களில் எளிமை காணப்படும்; எளிதில் அளவிட முடியாத ஆழமும் காணப்படும். கலைவளம் மல்கி இருக்கும். அது வாழ்வின் தேவைகளுக்கு ஏற்றவையாகவே மாண்புறும்; பழைய பண்பாடும் மதிக்கப்படும்; சீர்திருத்தப் புதுமையும் சிந்திக்கப்படும். அழிவு செய்துவரும் பெரும் வெள்ளம் போல் அலைகள் புரளும்; ஆக்க வேலைக்கு உரிய வகையில் அணைகளும் அமையும்; ஆத்திரம் விஞ்சும்; அறம் விளங்கும்.

எல்லாம் சேர்ந்த ம. பொ. சி.ஒரு தனிப்போக்கு என்றே சொல்ல வேண்டும்.

*(செங்கோல்; மலர் : 35. இதழ் : 30, 23—6—85, ப. 3).*

3. *திரு. வி. கல்யாணசுந்தரனார், திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை-1, மூன்றாம் பதிப்பு—1982, பக். 164—65; 660—62.*

4. மேற்கண்ட மேற்கோள் பகுதிகளில் இக்கால எழுத்துச் சீர்திருத்தம் மட்டுமே இக்கட்டுரையாளனால் செய்யப்பட்டுள்ளது. கிரந்த'எழுத்துகளிலும் மாற்றம் செய்யப்படவில்லை.

குருசாமி என்று குறிக்கப்படும் மாணவரே பேராசிரியர் ம. ரா. போ. குருசாமி.

மு. வ. மாணவர்களை நினைக்கும்போது திரு. வி. க. வுக்குப் புதிய தமிழகம் நினைவுக்கு வரல் கருதற்குரியது.

திரு. வி. க. தம் வாழ்க்கைக் குறிப்புகளில் சேதுப்பிள்ளையைக் 'கல்வி' என்ற தலைப்பில் குறித்தலும், மு. வ. வைச் 'சீர்திருத்தம்' என்ற தலைப்பில் குறித்தலும் கருதத்தக்கது.

5. பேராசிரியர் இருவரும் தாகூரின் பேரன்பர்கள். இது சொல்லின் செல்வர் ரா. பி. சே. தம் வீட்டின் முகப்பில் பாரதியார் 'கவீந்தரராம் ரவீந்திரர்' என்று போற்றிய தாகூரின் நிறை கோலத்திலான வண்ணப்படத்தை வைத்துப் போற்றியமையாலும் சிந்தனைச் செல்வராகிய டாக்டர் மு. வ. தாகூர் பற்றிய பள்ளிச்சிறுவர்களும் படித்துப் பயனடைய வல்ல புத்தகம் ஒன்றை எழுதியமையாலும் அறியலாம்.

## பயன்பட்ட நூற்கள்


1. சிவஞானம், ம. பொ., எனது போராட்டம், இன்ப நிலையம், சென்னை–4, 1974.

2. கலியாண சுந்தரனார், திரு. வி., வாழ்க்கைக் குறிப்புகள், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை–1. 1982.

# I. EARLIEST REFERENCES TO TAMIL

1. The chief intention of this brief note is to draw the attention of scholars to the earliest references pertaining to Tamil available in ancient Tamil works.[1] This is necessary not merely because of its interesting nature but of its historical value. Again this is essential not only to assess the antiquity of the language but also to understand the basis of appreciation of the love of mother-tongue by the Tamils of pre/post Saṅgam age.

And it has to be mentioned here and now that even Sanskrit does not make any reference to Tamil as such. Nor does Tamil about Sanskrit. This is indeed very surprising.

1.1. Tolkāppiyam (c. 700 B.C.),[2] the earliest Tamil grammar in/of Tamil is known for its uniqueness in treating not only the Grammar of the language (of sounds, words, syntax and meanings of words etc.,) but also of *literature* itself.

1.2. In this ancient Tamil grammatical work, Tolkāppiyar, who is considered to be more comprehensive than even Pāṇiṇi because of the above-mentioned speciality of treatment of the grammar of literature itself, has only three references to Tamil which are of importance because of their antiquity[3] and unambiguous nature. In the Sūtra that occurs in the first part itself of Tolkāppiyam, that speaks of the grammar of sounds and their behaviour Tolkāppiyar clearly records the fact of the exsistence of the word Tamil in a very homely way.[4] This itself establishes the truth that the word 'Tamil' was in popular usage meaning the language. Such seems to be not the case with Sanskrit in Pāninil!

1.2.1. The second and third references of Tolkāppiyam to Tamil are found in part two, chapter nine, while dealing with

the classification of Tamil vocabulary.[5] Here the significant reference to Tamil is in the context of home-land. It has also to be borne in mind that Tolkāppiyar's two references here in part-2: chapter-9: Sūtrams-2 & 4 to 'Tamil' clearly clinches the issue that the earliest name for the home-land of Tamil/s was well-known as Tamiḻ-Akam or Tamiḻ-nāḍu which are current expressions even today. In this context it is imperative to note that even before Iḷangōvaḍikaḷ the word 'Tamil' is chosen to mean the Tamil land[6] and the Tamil people.

1.2.2. This conclusion of ours about the earliest nomenclature for the home-land of the Tamil/s get all and full support of literary internal evidences from the Tamil works that succeed Tolkāppiyam immediately. They are as follows:

(1) Tamiḻakam — Puṟanāṉūṟu: 168-18
Patiṟṟuppattu — Pathikam II: 2-5
Silappadikāram: 3-37

(2) Tamiḻ nāḍu — Silappadikāram: 10-58
23-Kaṭṭurai-15
25-165
25-171
29-Uraippāṭṭu maḍai

1.2.3. It will be beneficial to consider the meanings of these two words—Akam and Nāḍu in this context as found in the Tamil lexicon.[7]

Akam—
1. Inside
2. Mind
3. Sexual pleasure
4. Breast
5. Agricultural tract
6. House
7. Place
8. Ether
9. Love-theme
10. Being subordinate, subject
11. An anthology of love-lyrics

Nāḍu—v. tr—1. To seek, enquire after, pursue
2. To examine, investigate
3. To desire earnestly
4. To know, understand
5. To resemble
6. To measure
7. To reach, approach
8. To think, consider
9. To scent as dogs

v. intr— To be measured

n— 1. Country, district, province
2. Locality, situation
3. Earth, land
4. World
5. Kingdom, state
6. Rural tracts
7. Open place, room, space, area
8. Side, region, quarter
9. A very large number
10. Agricultural tract

The above-noted meanings will certainly reveal exhilaratingly the appropriateness of the two words Akam and Nāḍu in denoting a home-land.

1.2.4. But an intelligent person may raise a tiklish question: why the expression 'Tamiḻ Nāḍu' *as such* has not even a solitary occurrence in Saṅgam poetry although nāḍu has nearly a hundred references therein.[8] I consider this very significant because I am of the opinion that the concept of a linguistic state or a single united nation must have been very vague in the beginning. And that it should have tried to take firm roots only during the end of the age of Saṅgam anthologies is evident from the references[9] to 'Tamiḻ nāḍu' in Silappadikāram. A specific reason for that might have been the conflict between north & south which is an important aspect of subject-matter dealt in the third & final canto of Silappadikāram. Further, more references[10] are found in Silap-

padikāram for contextual reasons wherein Tamiḻ is connected with the meaning of Tamil people (warriors) although such a meaning is readily available in two solitary instances[11] in Saṅgam anthologies.

1.2.5. Although the absense of the word Tamil in any context in the whole of the special third division of Tolkāppiyam is striking, the pertinent references to the patronising famous three-kings of Tamiḻnāḍu in an appropriate place[12] and in an odd place like that of the chapter[13] on prosody are interesting.

2. On the whole 'Tamil' has 51 references in ancient Tamil literature, of which 5 are in Tolkāppiyam, 17 in Saṅgam anthologies, 24 in Silappadikāram and 5 in Maṇimēkalai.[14] This simple statistics will reveal the ascending importance assumed by the word 'Tamiḻ' in the chronological development of the Tamil Society. A close look will also show that the occurrence has a distribution of 1 in Pattupāṭṭu, 2+1 each in Akanāṉuṟu & Paripāḍal and 2+2 Patiṟṟupattu but 7 in Puṟanāṉūṟu. To any student of ancient Tamil literature, this raise in the number will certainly convince the contextual need for it namely the subject-matter dealt in Puṟanāṉūṟu is about the external public life of the society. This very reason explains the comparatively larger number of occurrences in Silappadikāram and relatively diminished references in Maṇimēkalai.

3. Now let us briefly and quickly review the nature and significance of the epithets added to the word Tamil in pre and post positions. With regard to this the most significant reference is in the Tolkāppiyam text itself wherein the oldest and greatest of Tamil grammarians refers to Tamil as 'Centamiḻ' in a couple of places.[15] 'Cem' is a contraction of the word 'Cemmai'. It will be certainly interesting and useful to know, the meanings of the word 'cemmai' as found in the Tamil lexicon[16] which are as follows.

(1) Redness, ruddiness
(2) Goodnesss, soundness, good condition
(3) Spotlessness, uprightness, directness, recititude
(4) Fairness, impartiality
(5) Unity

(6) Excellence, eminence, greatness
(7) Fineness, neatness, cleanliness
(8) Beauty, grace, elegance
(9) Moon's descending node
(10) Sulphur

Any one can now easily understand and appreciate that of the above-noted meanings seven out of ten (2-8) fit in well for the description of the qualities of Tamil language and culture. Above all by the usage of this *only* epithet in Tolkāppiyam for Tamil the positive purity consciousness for Standard Tamil among the ancient Tamils is revealed in a heartening manner although they gave equal importance to Standard spoken word according to Panampāranār himself.

3.1 It is surely significant that this epithet—phrase 'Centamiḻ' is pertinently used in the Foreword known in Tamil as *Pāyiram* by Paṉampāraṉār[17] to Tolkāppiyam. But the Supreme significance is in the usage of the word 'Iyaṛkai' in post-position by Paṉampāraṉār which only means that the pre-position epithet 'Cen' should not make any one to misunderstand or to have any misgiving that Tamil language is in anyway unnatural. Unless one realises this deep-meaning of the deliberate use of the word 'Iyaṛkai' by Paṉampāraṉār he will lose the most precious implicit sense of the author of the text about the *nature* of Tamil language. This is also vouchsafed by the very nomenclature given to one of the three-fold classification of Tamiḻ i.e. *Iyaṟṭamiḻ*. In this context it will be appropriate to remember the fact that the earliest reference to 'Koduntamiḻ' is only in the Nūṛkaṭṭurai at the end of Silappadikāram.[18]

3.2 Next to the epithet 'Cen' we have only a few epithets added to 'Tamil' in Ancient Tamil Literature. Their distribution are as follows:—

| | | | | |
|---|---|---|---|---|
| 1. Taṇ | — Patiṛṛuppattu | — 63:9 | | |
| | Puṟanāṉūṟu | — 35:3 | | |
| | | 51:5 | | |
| | | 198:12 | | |
| | | Padikam—10 | | 10 |
| | Silappadikāram | — 25:66 | | |
| | | 28:153,209 | | |
| | | Padikam—25 | | |
| | Maṇimēkalai | — 19:109 | | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 2. | Nal | — | Puranānūru | — | 50:10 | 1 |
| 3. | Ten | — | Silappadikāram | — | 27:5<br>26:185<br>10:58 | 4 |
| | | | Maṇimēkalai | — | 25:137 | |
| 4. | Arum | — | Silappadikāram | — | 27:189 | 1 |
| 5. | Vaṇ | — | Silappadikāram | — | 23:63<br>25:158 | 1 |
| 6. | Māvaṇ | — | Maṇimēkalai | — | Padikam—97 | 1 |

3.3 Of the above mentioned list of epithets it can be seen that 'Taṇ', 'Nal' have occurrences only in Saṅgam anthologies and the rest in the Twin epics only. Of all these 'Nal' appears to be outstanding in tune with the general preference to that by the ancient Tamil poets in all other matters also.[19]

3.4 Before we proceed further it will be interesting and instructive to note the various meanings for the epithets Taṇ, Nal, Ten, Arum, Vaṇ and Mā according to the Tamil lexicon.[20]

Taṇ
1. Coolness, coldness
2. Water
3. grace

Nal
Good

ten
1. South, Southern region
2. Beauty
3. Charity
4. Harmony, music
5. Song
6. Sweetness
7. Coconut tree
8. Right side

(Arumai-Arum)
1. Rareness
2. greatness
3. Difficulty
4. Difficulty of attainment
5. Smallness, minuteness

(Vaṉmai-vaṉ)
1. Bounty, liberality
2. Quality, property, nature
3. Beauty
4. Truth
5. Fruitfulness, fertility, abundance
6. Strength
7. Praise, reputation
8. Sirissa

Mā[13]
1. greatness
2. strength

Mā[14]
1. Beauty
2. Blackness
3. Colour
4. Paleness caused by love-sickness

3.5 Those who see these meanings of the above noted epithets will have no difficulty in realising the appropriateness of these epithets to Tamil. Now, finally let us conclude by remembering the meanings for the word Tamil itself.[21]

Tamiḻ
1. Sweetness, melodiousness
2. Refined quality
3. Tamil language, being divided into Iyaṟṟamiḻ, icai-t-tamiḻ, nāṭaka-t-tamiḻ
4. Tamil literature, Tamil work
5. The Tamils
6. The Tamil country

3.6 Although the Tamil Lexicon most unfortunately misses the most significant sense of the word Tamil i.e. love-matter (Akapporuḷ) the earlist reference to this meaning is surely avaliable in the Paripāḍal text itself (9:25) and also in the colophon of Kuṟiñcippāṭṭu, one of the ten Idylls. Thus we can find the evolution of the meanings for the word Tamil from that of language to love (life).

3.7 The significant reference to Tamil in Ciṟupaṉāṟṟuppaṭai (66) that reveals both the anxiety and authenticity of/for the establishment of a powerful centre (Sangam) for Tamil learning has other strong references also in support[22]

3.8 However the elymological root-meaning of the word Tamil is not clear by the old references.

3.9 More memorable are the references[23] wherein Tamil is itself used as epithets to the rivers Vaiyai and Kāveri of which we get to the latter a reference a reverential clue for the worship of Nature as Mother-goddess also. Probably the earliest reference to Tamil (land including) as Mother-goddess is clearly available in Silappadikāram.[24] So also Maṇimēkalai appears to give the earliest direct reference to Tamil subject for *critical* study of its quality.[25]

3.10 Thus the various references to Tamil, its land and people reveal that the ancients were not merely vociferous (unlike us, the moderns!) but had the local, national and world visions.[26]

## NOTES

1. I am thankful to Thiru P. Krishnan (Research scholar) who is working under my supervision for his Ph. D. thesis on 'தமிழ் நூல்களில் மொழி இனம், நாடு' (Language, Nation and State in Tamil works) for his assistance in checking the relevant data.

2. (a) Dr. S. Ilakkuvaṉār, Tolkāppiyam (in English) with critical studies, (1963) [Ph. D. Thesis of the University of Madras], p.9.

(b) Vide Dr. N. Sanjeevi, Vaḍamoḻi: Sanskrit in ancient Tamil literature — Annals of Oriental Research — Vol. 24, Part I.

3. Vide also Dr. K. V. Zvelebil, Tamil Literature (1975) — p. 53.

4. Tolkāppiyam (Text — Kazhakam), 385.

5. Tolkāppiyam, Eccaviyal, 2, 4.

6. Puṟam — 19, 35, 50, 51; Akam, 227.

